அண்ணா

வட்டத்தில் கல்கி – II

# கல்கி


KALKI
24.8.86
ரூ. 1.50




வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்






சத்துமிகுந்த, சுவையான பிஸ்கட்.

பிரிட்டானியா

# அமைச்சர் தரிசித்த அழியாத திருமேனி!

"வைஷ்ணவமகான் ஸ்ரீராமானுஜரின் உடல் அறுநூறு ஆண்டுகளாக ஸ்ரீரங்கம் கோயிலில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இது ஒரு விஞ்ஞான அதிசயம்" என்று அமைச்சர் வி.வி. சுவாமிநாதன் அண்மையில் கூறினார். இது தொடர்பாக அமைச்சரைச் சந்தித்தபோது அவர் மேலும் சொன்னார்:

"ரஷ்யாவில் லெனின் உடலும் கோவாவில் புனித பிரான்சிஸ் சேவியர் உடலும் பாதுகாக்கப்படுகின்றன. அவர்கள் உடல்களின் பெரும்பகுதி ஆடையால் மூடியிருக்க, முகமும் விரல்களும் மட்டுமே வெளியில் தெரியும். ஆனால் ஸ்ரீரங்கத்தில் ராமானுஜர் உடலை முழுமையாகக் காண முடிகிறது."

அமைச்சர் சௌந்தரராஜன்தான் வி.வி. சுவாமிநாதனை அழைத்துப் போய் ராமானுஜர் உடலைக் காண்பித்தாராம். வி.வி.எஸ். தொடர்ந்தார்:

"அங்கே உள்ள வைணவ அர்ச்சகர் கூடம் கொளுத்தி ராமானுஜர் உடலைக் காட்டினார். அதிக வெளிச்சத்துக்குக் கையில் அகல் விளக்கும் வைத்துக் கொண்டார். சப்பணமிட்டுத் தரையில் அமர்ந்த கோலத்தில் இருக்கிறார் ராமானுஜர். திடகாத்திரமான உடல். வலக்கரம் அருளாசி வழங்குவது போன்ற நிலையில் உள்ளது. வெற்றுடம்புதான். நகங்களைக்கூடக் காண முடிந்தது. தலை ஆபரணத்தை எடுத்துக் காட்டியபோது தலைமுடிகளைக் கூடப் பார்த்தேன். திறந்த கண்களில் அருள் பெருகுகிறது.' 'உடலை எப்படிப் பாதுகாக்கிறீர்கள்?' என்று கேட்டபோது கோயில் நிர்வாகத்தினர் 'வருஷத்துக்கு இரண்டு தடவை பச்சைக் கற்பூரமும் குங்குமப்பூவும் சேர்த்து உடலை மெழுகி விடுவோம்' என்றனர்."

அவர்களிடம் அமைச்சர் சுவாமிநாதன் மேலும் கேட்டு அறிந்தவை: ராமானுஜர் நூற்றிருபது வருடங்கள் உயிர் வாழ்ந்த மகான். உறவினர்களும் நண்பர்களும் அவரது சிலையை வடிக்கச் செய்து மேலக் கோட்டை என்ற இடத்தில் ஸ்தாபித்தார்கள். அதனைத் "தமர் உகந்த திருமேனி" என்பர். ராமானுஜரே ஒரு சிலை வடிக்கச் செய்து அதைக் கண்ணாடி முன் அமர்ந்து சரிபார்த்து அங்கீகரித்தார். அது, "தான் உகந்த திருமேனி" என்ற பெயரில் ஸ்ரீபெரும்புதூரில் உள்ளது. ஸ்ரீரங்கத்தில் தாமே சிலையாகிவிட்டதால் இது "தான் ஆன திருமேனி" என்று குறிப்பிடப்படுகிறது. வருஷத்துக்கு ஒரு தடவை ஸ்ரீ ரங்கநாதன் (உற்சவர்) ராமானுஜரைக் கண்டு விட்டுப் போகிறார். திரும்பி உற்சவர் சந்நிதிக்குப் போகுமுன், கால்களைக் கழுவிக் கொண்டுதான் செல்வார் — இறந்தவர் வீட்டுக்குச் சென்று வந்ததால்!

ஸ்ரீரங்கம் அஹோபில மடத்தின் கீழ் சென்னையில் இயங்கி வரும் பள்ளிக்குச் சென்று அதன் நிர்வாகியும் ஸ்ரீரங்கம் வாசியுமான டாக்டர் வாசுதேவாச்சாரியாரை சந்தித்தோம். அவர் சொன்னார்:

"நான் பல தடவை ராமானுஜர் சந்நிதியில் சேவித்திருக்கிறேன். பரம்பரை பரம்பரையாக வாய்வழியாகச் சொல்லி வரப்படுகிற செய்திதான் இது. கல்வெட்டு ஏதும் இருப்பதாய்த் தெரியவில்லை.

"மகான்கள் இறந்தால் எரிக்காமல் புதைப்பது மரபு. அங்கு துளசி மாடம் பெரிதாகக் கட்டி பிருந்தாவனம் என்பார்கள். பூஜை, ஆராதனை கூடாது. ஆனால் காலப் போக்கில் இது மாறி இரு நூறு ஆண்டுகளாக பூஜைகள் நடக்கின்றன.

"ஒரு விதிவிலக்காக ராமானுஜர் உடலைப் புதைக்காமல் பூஜித்து வருகிறார்கள். ராமானுஜர் சந்நிதிக்கு நாம் போனால் மறுபடி கால் அலம்பிக் கொண்டுதான் ரங்கநாதரைத் தரிசிக்கச் செல்ல வேண்டும்.

"ஸ்ரீரங்கத்தில் இருப்பது ராமானுஜர் உடலேதானா அல்லது சிலையா என்று யாரும் ஆராய்ச்சி செய்தது கிடையாது. அவர் உடல் அமர்ந்த நிலையில் மேலே கதை போன்று ஏதாவது பொருளால் அதைப் பலப்படுத்தியிருக்கலாம். ஆனால் இதெல்லாம் தேவையில்லாத தர்க்கம், ஆராய்ச்சி. அவர் பூஜைக்குரியவர். அவரை சேவிப்போம்."

பேட்டி: எஸ். சந்திரமௌலி

படம்: யோகா



• வாசுதேவாச்சாரியார்

• அமைச்சர் வி.வி.எஸ்.

# பெண்ணைப் பெற்றுவிட்டால்...




இவர் கதையும் உண்மைக் கதை!












மணிமேகலையின்
நினைவு
பின்நோக்கிச்
சென்றது...
வீட்டை விட்டு
ஓடி வந்துட்டேன்...
உங்களோட நம்ம கலப்புத்
திருமணம்... உங்க
பெற்றோர் என்ன
சொல்வாங்களோ?
பயப்படாதே!
நாம் காதல்
எல்லா எதிர்
ப்பையும்
வெல்லும்!


ஓராண்டு
குடித்தனத்தில்
கல்யாணி
பிறந்தாள்...
என்னங்க,
இந்தக் குழந்
தைக்காகவாவது
உங்க வீட்டு
மனுஷங்க
நம்மை வந்து
பார்ப்பாங்
களா?


அவள் ஆசைக்கு
நேர் விரோதமாக
நடந்தது.
மணிமேகலையின்
கணவனை மிரட்டி
அவன் வீட்டினர்
அவனை
இரண்டாம்
கல்யாணத்
துக்குச்
சம்மதிக்க
வைத்து
விட்டனர்...
கெட்டி
மேளம்...
கெட்டி
மேளம்...


நிராதரவாய்க்
கைக்குழந்தையோடு
பிறந்த வீட்டுக்குத்
திரும்பி வந்தாள்
மணிமேகலை...
அண்ணே!
என்னை மன்
னிப்பீங்களா?
அசடு!
இந்த வீட்டுல
உனக்கில்லாத
உரிமையா?


மணிமேகலை கடந்த கால நினைவுகளிலிருந்து நிகழ் காலத்துக்குத் திரும்பினாள்...
அண்ணே! கஸ்தூரிக்கு மூன்று வயசாயிருச்சு... இன்னும் நான் உனக்குப் பாரமா இருக்கக் கூடாது... ஒரு வேலை தேடிக்கிறேன்.
உன் இஷ்டம்!


அலையாக அலைந்து ஒரு நாள்...
அண்ணே! அண்ணே! எனக்கு சத்துணவு ஆயா வேலை கிடைச்சிருச்சு!
ஏதோ ஆபீஸிலே வைக்க வேண்டிய வெயிட்டோ வைத்தாலும் வேலை கிடைத்ததே...! அதைச் சொல்லு!


அண்ணே! நான் தனியா போயிடறேன்... வாழா வெட்டி நான் இங்கே இருக்கிற வரைக்கும் தங்கைக்குக் கல்யாணம் ஆகாது!
தனியாவா? முடியவே முடியாது!


குழந்தைகளுக்குப் பணியாற்ற சந்தோஷத்துடன் வேலைக்குப் போனாள் மணிமேகலை....
குழந்தைகளா! வயிறாரச் சாப்பிடுங்க! சிறு உணவை வீணாக்கக் கூடாது...!


சில நாட்கள் சென்று அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியர்
மணிமேகலை! நீ எப்படி இருக்கே தெரியுமா? சினிமா நடிகை மாதிரி தளதளன்னு...


மணிமேகலை அதிர்ச்சியுற்றாள்.
சார்! நீங்க பெரியவங்க... இப்படி யெல்லாம் பேசறீங்க... ப்ளீஸ்... நான்


ஏமாற்ற மடைந்த தலைமை ஆசிரியர் பள்ளிக் கல்வி ஆய்வாளர் வந்த போது...
சார் அந்தப் பொண்ணு மணி மேகலை... பார்க்கத் தான் சாது! சத்துணவுக் கான அரிசி, பருப்பு என்று எல்லாத்தையும் கொள்ளை பண்ணுது...
அப்படியா! விசாரிக்கிறேன்...


கல்வி ஆய்வாளர் மணிமேகலையை அழைத்து...
இந்தாம்மா... உன்னைப் பத்தி ஏகப்பட்ட புகார்... அதை நான் எதையும் கண்டுக்கப் போறதில்லை... என்ன புரியுதா?


புரியலியா? இப்படி பக்கத்தில் வா, சொல்றேன்...
ச்சீ! நீங்கள்ளாம் அக்கா தங்கச்சிங்களோடு பிறக்கலியா? தூ...


வெறுப்புடன் வீடு திரும்பிய மணிமேகலை மறுபடி பஜார்க் கூடம் பக்கமே போக அவசியமில்லாதபடி...
டிஸ்மிஸ் உத்தரவு! அத்தனையும் பொய்யான குற்றச் சாட்டுகள்


15-7-86-ல் கல்கி நிருபரிடம் பேசினாள் மணிமேகலை...
சார்! வெட்கத்தை விட்டு நான் என் கதையைக் கூறக் காரணம், மறுபடி வேலை கிடைக்கும்ங்கறதுக்காக இல்லை... கணவனால் கைவிடப்பட்ட கொஞ்சம் அழகான பெண்களை இந்த ஆண்கள் சமூகம் எப்படி சீரழிக்கத் துடிக்கிறது என்பதை உணர்த்தத்தான்...

# உண்மையிலேயே பாதுகாப்பை விரும்புவோர்க்கு



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

## டெபாசிட்தாரர்களுக்கு கூடுதல் வட்டி

# +2%

வழக்கமான விகிதத்துடன் வழங்கப்படுகிறது

கீழ்க்கண்ட வட்டி விகிதங்களில் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| | | |
|---|---|---|
| 1-வருடம் | 17+2 | 19% |
| 2-வருடங்கள் | 18+2 | 20% |
| 3-வருடங்கள் | 19+2 | 21% |
| 5-வருடங்கள் | 22+2 | 24% |

ரூபாய் 20,000/க்கு மேல் டிபாசிட் செய்யும் ஒவ்வொரு டிபாசிட்டுக்கும் ஊக்க போனசும், மிக மதிப்புள்ள அன்பளிப்பும் வழங்கப்படும்.

உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி

| | |
|---|---|
| சென்னை | : 91, உஸ்மான் ரோடு, (சிவா-விஷ்ணு கோயில் அருகில்) தி.நகர், சென்னை-600 017. போன்: 447186/442218/445480 |
| பெங்களூர் | : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன்: 366971 |
| திருச்சி | : 22, மதுரை ரோடு (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில் திருச்சி-620 008. போன்: 31376/29772 |
| பாண்டிச்சேரி | : 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) 2வது மாடி. பாண்டிச்சேரி-605 001. போன்: 6493 |
| தஞ்சாவூர் | : எண்: 2 & 3 முதல் மாடி, ஜி.ஏ.கனல் ரோடு, தஞ்சாவூர்-613 001, போன்: 1626 |
| திருவண்ணாமலை | : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன்: 2483 |
| பட்டுக்கோட்டை | : 121, தலையாரி தெரு, (முதல் மாடி) பட்டுக்கோட்டை-614 601. போன்: 453 |
| கோயமுத்தூர் | : 666, ராஜா வீதி (முதல் மாடி) கோயமுத்தூர்-641 001. போன்: 34369 |
| மதுரை | : 41, வடக்கு வெளி வீதி (முதல் மாடி) மாடர்ன் லாட்ஜ் ஸ்டாப்பிங், மதுரை-625 001. |

JAY ADTS

# போகர் இருக்க பயமேன்?



• சந்திரா மூலம் போகர் பேசும் காட்சி!

போகர் ஆவியுடன் பேசிய நிருபர்கள்!

• கோபால்



"ஆன்மீகம் என்றால் என்ன?"

"தெரியாது ஐயா!"

"கடவுள் என்றால் என்ன?"

"தெரியாது ஐயா!"

"'தெரியாது' என்று சொல்வதைக் கூடப் பணிவாகச் சொல்ல வேண்டும். இல்லையா?"

"அப்படியா... ஐயா...?"

"நீங்கள் என்ன பணி செய்கின்றீர்கள்?"

"சமூகப் பணி ஐயா..."

"சமூகப் பணிக்குள்ளேயே ஆன்மீகப் பணியும் அடக்கம் இல்லையா?"

"அப்படியா... ஐயா...?"

'ஏதோ புராணப் பட 'டயலாக்' மாதிரி இருக்கிறதே' என்று யோசிக்கின்றீர்களா? அதுதான் இல்லை. பழனியில் புகழ்பெற்ற ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த சித்தரான போகர் பெருமானுடன் இப்படியொரு பேச்சுப் பேசிக் கொண்டிருக்கிறோம் நாம். (நாம் என்றால் போகர் முன்னால் உட்கார்ந்திருக்கின்ற ஐந்து பேர்) ஆயிரம் வருஷங்களுக்கு முன்னுள்ள பெருமானுடன் எப்படிப் பேச முடிந்தது? ஆச்சரியப்படுவீர்கள்.

வாஸ்தவம்தான்.

அந்தக் காலத்து போகர், ஏகக் குறும்புக்காரராய்க் கூடுவிட்டுக் கூடு பாய்ந்திருப்பார் போலிருக்கிறது. இப்போது இவ்வளவு வருஷங்கள் கழித்தும் அதே வயதான குறும்புடன் பழனியில் உள்ள சந்திரா என்கிற பெண்ணின் உடம்பில் கூடு பாய்ந்து புராண பாஷையில் பேசிக் கொண்டிருக்கிறார். அவருடன்தான் நாமும் பேசினோம்.

நாம் போன போது — மதிய வேளை. ஒரு பெண்ணிடம், 'இங்கே போகர் ஒரு பெண்ணிடம் பேசுகிறாராமே!' என்று நாம் கேட்டதும் அந்தப் பெண் சற்று வெட்கப்படுகிறார். அதற்குள் இன்னொரு பெண் வந்து குறுக்கிட்டு, "இந்தப் பெண்கிட்டே தாங்க போகர் பேசறார்" என்றதும் ஆச்சரியம். சர்வ சாதாரண குடும்பத்து முகத்துடன், மாநிறத்துடன் சற்று உள்ளடங்கிப் பேசுகிற சந்திராவிடம் போகரா? இரண்டு வருஷங்களுக்கு முன் திடீரென்று சந்திராவுக்கு அருள் வந்து போகராகி விட்டாராம். இத்தனைக்கும் பி. காம் படித்திருக்கிறார் சந்திரா!

ஆச்சரியத்துடன் உள்ளே போகிறோம். அன்னை புவனேஸ்வரி மாடம் என்கிறார்கள். அதுதானே! போகர் இருக்கிற இடம் மாடமாகத்தானே இருக்க வேண்டும். ஆளுக்காள் துண்டை இடுப்பில் இறுக்கிக் கொள்ளாத பரவசமாய் உள்ளே போனோம். அதற்குள் சந்திராவின் அண்ணன் கோபால் வந்து விட்டார். படபடவென்று பேசுகிறார். உட்புறமாகக் கூட்டிக் கொண்டு போகிறார். பல்வேறு இலை தழைகள், வெங்காயம் உட்பட ஒரு அறையில் இறைந்தபடி கிடக்கிறது. மூலிகையாம்.

"மூலிகை எடுக்கிறதெல்லாம் லேசில்லைங்க!" என்று சொல்கிறார்.

"என்ன செய்வீங்க?" கேட்கிறோம்.

"ஐயாவுக்கு(சந்திராவுக்கு)திடீர்னு அருள் வந்துடும். திடீர்னு ஒரு மலைக்குப் போகணும்னு சொல்லிடுவார். மூலிகை இருக்கிற இடத்தை நோக்கிக் கை காண்பிச்சபடி, காடு மேடெல்லாம் தவ்விக் குதிச்சுப் போக ஆரம்

பிச்சுடுவார். நாங்களும் பின்னாலேயே ஓடுவோம். திடீர்னு ஒரு இடத்திலே கையைக் காட்டுவார் ஐயா! பார்த்தால் மூலிகை. பறிச்சுக்கிடுவோம். சமயங்கள்லே ராத்திரி நேரத்திலே டார்ச் லைட்டோடு மலைகள்லே... தேடிட்டுப் போவோம்... அப்படிச் சேர்த்ததுதாங்க இந்த மூலிகை'' என்று படபடப்பாக விளக்கிறார்.

சொல்லச் சொல்ல மகிமையால் நமக்கு உடம்பே விறைப்பாகிப் போய் விட்டது. நடு இரவில் டார்ச் லைட்டோடு... மூலிகைக்காக ஒரு கறுங்கோஷ்டி தவ்வித் தவ்விப் போகிறதென்றால் விறைப்பாகாதா என்ன!

''இங்கே பாருங்கள்'' என்று கறுத்த சிலை ஒன்றைக் காட்டினார். பிள்ளையார் சிலை. அப்படியொரு கறுப்பு. ''இது நவபாஷாணச் சிலைங்க... பழனி முருகன் சிலையும் நவபாஷாணத்திலே செய்ததுதான். ஆனா அது அறுபத்து நான்கு மூலிகைகளாலான நவபாஷாணச் சிலை. இப்போ குறைபட்டுப் போச்சுங்கறாங்க; எங்க போகர் ஐயாவே சொல்லித்தான் இந்தச் சிலை செஞ்சிருக்கிறோம். நவபாஷாணத்துலே பழனி முருகன் சிலையைச் செஞ்சு மலையிலே வைக்கணும் கிறதுதான் ஐயாவோட உத்தரவு. இப்பவே ''பழனி முருகன் சிலைக்குக் கீழே தோண்டினால் இன்னொரு முருகன் சிலை இருக்குன்னு போகர் சொல்லியிருக்காருங்க. கோயில் அதிகாரிகள்தான் கண்டுக்க மாட்டேங்கிறாங்க..''

போய் ஒரு ஹாலில் உட்கார்கிறோம். ''ஆரம்பத்திலே மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி வழிபாட்டு மன்றம் வைச்சிருந்தோம். ஒன்றும் சரிப்பட்டு வரலை. போகர் ஐயாவைக் கும்பிட ஆரம்பித்த பிறகுதான் பல சித்திகள் எங்களுக்குக் கூடுச்சு. இப்போ அவங்களாலே குணப்படுத்த முடியாததைக் கூட நாங்கள் குணப்படுத்தியிருக்கோம். தெரியுமா? சகலத்திற்கும் ஐயா மருந்து சொல்லியிருக்காருங்க. எய்ட்ஸுக்குக் கூட ஐயா மருந்து ரெடி பண்ணிட்டாருங்க. அரசாங்கத்துக்குக் கூட மருந்து இருக்குன்னு எழுதிப் போட்டிருக்கோம். யாரும் கண்டுக்கலே'' — வருந்தியபடி சொல்கிறார் போகரின் அண்ணன்... ஸாரி... போகர் வடிவிலிருக்கிற சந்திராவின் அண்ணன்.

ஆளுக்காள் மண்டையைக் குடைந்து கொண்டு எய்ட்ஸ் நிவாரணத்திற்காக ஆராய்ந்து கொண்டிருக்கிற போது எவ்வளவு பொறுப்புடன் மருந்து கண்டு பிடித்து வைத்திருக்கிறார் போகர்? ஆயிரம் வருஷங்களுக்கு முன் வாழ்ந்திருந்தாலும்— எய்ட்ஸ் பற்றிப் போகர் பெருமானுக்குத் தெரியாமலா இருக்கப் போகிறது? இந்த அரசாங்கம், ஏன் போகர் ஐயா கடிதம் எழுதியும் கவனிக்காமலிருக்கிறது?

சில கடிதங்களை எடுத்துப் போடுகிறார் அண்ணன். பாராட்டுடன் ஐயாவுக்கு எத்தனை கடிதங்கள்? சத்தான ஒரு 'மாண்புமிகு'வின் கடிதமும் கிடக்கிறது.

மாடத்து மக்கள் என்று ஒரு கோஷ்டியே ஐயா உடனிருக்கிறது. (சரி. மாடத்து மக்களாக என்ன செய்ய வேண்டும்? மந்திரக்(!) கோலால் தினமும் பதினொரு அடி கள் என்று... பல நாட்கள் அடி வாங்க வேண்டும். தீர்த்தம் தெளிப்பார்கள். நனைய வேண்டும்; தொண்ணூறு நாட்கள் ஒருவேளை மட்டும் சாப்பிட்டு நடமாட வேண்டும். பிறகு மாடத்து மகன் அல்லது மகளாகி விடுவீர்கள் நீங்கள்.)

''சந்திராவிடம் எப்போது போகர் வருவார்?''

''பொறுங்க. பொறுங்க'' அண்ணன் பதறுகிறார்.

கூச்சத்துடன் வந்தார் சந்திரா. ஒரு வட்டமான பலகையைக் கீழிறக்குகிறார்கள். பிரணவ மந்திரம் வரையப்பட்ட அது, சுழலும் போது அறிவு வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுமாம். பார்த்தால் ''லைவ ராஜா லைவ'' என்ற கத்தலோடு சுழற்றி விடுகிற பலகை மாதிரி இருக்கிறது. நடுவில் ஓம் எழுத்து. ஓரத்தில் ஒரு வெள்ளிக்காசு. சந்திரா பலகை முன் அமர்ந்து ஒரு விரலால் தொடுகிறார் காசை. சுழற்றுகிற மாதிரி தெரிகிறது. அப்படியில்லையாம். காசே விரலை இழுத்துக் கொண்டு போகிறதாம். வேகம் அதிகரிக்கிறது. உம்... சந்திரா முகம் இறுக்கமடைகிறது. போகராகி விட்டார். போகர்... போகரேதான்.

ஒருவிதமாய் நிமிர்ந்து பார்க்கிறார் போகர். ஒரு தடிமனான பெண்மணி வளமான குரலில், 'போகர் ஐயா... ஐயா...' என்று மனமுருகிப் பாட ஆரம்பித்து விட்டார். பாடின வேலை மதிய வேலையே மறந்து போய்விட்டது. பிறகு அண்ணன் பாடுகிறார். பக்திப் பெருக்கெடுக்க ஆரம்பித்து விட்டது. திடீரென்று போகருக்குக் குஷி பிறந்து நம் உடம்பிலும் புகுந்து விளையாடி நாமும் நம்மை யறியாமலேயே திருஞான சம்பந்தன் மாதிரி பாட ஆரம்பித்துவிடுவோமோ என்று தோன்ற ஆரம்பித்து விட்டது. என்ன பரவசம்? இந்த வேளையில் நம்மாட்களிலேயே ஒருவர் வாயைத் திறந்து — பலர் சந்தேகப்

ஹோட்டல் சப்ளையரிடம்: என்ன இன்னிக்கு வடை ரொம்பப் பெரிசா இருக்கே?

சப்ளையர்: வடை போடற சரக்கு மாஸ்டர் வீட்டுக்கு அவசரமாப் போகணும்னு பர்மிஷன் கேட்டாரு. முதலாளி வடை பூராவையும் போட்டுட்டுப் போகச் சொன்னாரு. அதனால்தான் சார்.....

— வி. ராஜேஸ்வரி



பட — நல்லவேளை —'கொட்டாவி விட்டு மூடினார்.

''போய்ப் புற்றைப் பதினெட்டு முறை சுற்றி வாருங்கள்''. சித்த புருஷர் சொல்கிற போது மறுப்பேது? வீட்டின் பின்னால் ஒரு புற்று. என்ன புற்றோ? ஆனால் சுற்றிலும் ஏக எறும்புக் கூட்டம். எறும்புகள், மகிமை தெரியாமல் நாத்திகத்தனத்துடன் காலைக் கடிக்க— வலி பின்னியபடி உதறி உதறிச் சுற்றினோம். வியர்த்து விட்டது.

வந்து உட்கார்ந்தோம். பேச ஆரம்பிக்கிறார் போகர். (திரும்பவும் கட்டுரையின் முதல் பாராவைக் 'கொஞ்சம் மகிமையுடன்' வாசியுங்கள்.)

நம்மிலேயே கொஞ்சம் தென்பான பேர் வழி போகரிடம் பேச ஆரம்பித்தார். சோதித்தார். போகர். கேள்விகள் கேட்டார். ''பணிவு வேண்டும்'' என்றார், நேருக்கு நேர் பார்த்துக் கொண்டு. கை மட்டும் வட்டத்தில் சுழன்று கொண்டே இருந்தது. நாம் பேசப் பேச போகர் முகத்தில் படிப்படியாக உஷ்ணம். கடைசியில் ''அறிவற்றவர்கள்'' என்றார் முகத்தில் அடித்தாற் போல. போகர் கண்டுபிடிப்பாயிற்றே! கை, காசை விட்டு விட, காசு சுழன்று விழுந்தது.

அண்ணன் சமாதானப்படுத்துகிறார்.

''ஏதோ தெரியாம சொல்லிட்டாங்க. மன்னிச்சிடுங்க ஐயா...'' அண்ணன் கெஞ்சியபடி சொல்லியும் ஐயாவிடம் முறைப்பு நீங்கவில்லை.

''ஐயாகிட்டே போய்ட்டு வர்றோம்னு சொல்லி ஆசி வாங்கிக்குங்க...'' அண்ணன் நம்மிடம் சொல்கிறார்.

''நாங்கள் போய் வருகின்றோம் ஐயா.''

கொஞ்சம் யோசிக்கிறார் போகர். ''போய் வாருங்கள்; வாழ்த்துக்கள்'' என்று ஐயா சொன்ன போது, தலைக்குள் ஆணியடித்து அருவி இறங்கிய மாதிரி குளிர்ச்சி.

பரவசமாய் வெளியே வந்தோம்!

உங்களுக்கு ஏதாவது வியாதியா? அவஸ்தைப்படுகிறீர்களா? கவலையே வேண்டாம். பழனி லட்சுமிபுரத்தில் — ஐயாவைப் பாருங்கள். பதினெட்டு முறை புற்றைச் சுற்றுங்கள். சகலத்துக்கும் நிவாரணம் கிடைத்துப் போகும். எய்ட்ஸாய் இருந்தால் என்ன. அதற்கும் மேல், மனுஷன் தலைகீழாய் கவிழ்ந்து நடக்கிற மாதிரி ஒரு வியாதி வந்தால் என்ன.. அதற்கும் ஒரு மூலிகை தேடி நடு இரவில் மலை மீது தவ்வித் தவ்வி ஓட போகர் இருக்கும் போது பயமேன்?

போகருக்கு ஒரு விண்ணப்பம்:

இந்த முறை ஒரு பெண் வழியாக இறங்கிப் பேசுகிறீர்கள். சரி, அடுத்த முறை, 'ஷிப்டி லாவது' (எத்தனை பேர் காய்ந்து கிடக்கிறார்கள்?) எங்களைப் போன்றவர்கள் மீது கருணையுடன் இறங்கிப் பேசுங்கள். நாங்களும் கொஞ்சம் வியாபாரம் பண்ணிக் கொள்கிறோம். ''போகரே சரணமய்யா...!''

— ஞாநி

# அடுத்த இதழில்...



**இடைத் தேர்தல் நிலவரம் எப்படியிருக்கிறது?**

— நேரடி ரிப்போர்ட்



''அரசியல்வாதிகளின் தலையீட்டையும் அஞ்சாமல் சந்திப்பேன்.''

— போலீஸ் உயர் அதிகாரி திலகவதி பேட்டி



* பம்பாய்த் தமிழர் சிறப்பிதழ் படித்தேன். பம்பாயில் பதினாறு ஆண்டுகள் பணி செய்த ஆசிரியை நான். பம்பாய் வாழ் தமிழர் பற்றி இதைவிட யாரும் சிறப்பாகப் படம் பிடித்துக் காட்ட முடியாது. ஆயினும் ஒரு சிறு குறை. நகர மன்றத்தாரால் சிறப்புற நடத்தப்படுகின்ற, எண்ணிக்கையில் ஐம்பதை எட்டப் போகும் தமிழ்ப் பள்ளிகளையும் அதில் பணிபுரியும் நூற்றுக்கணக்கான தமிழ் ஆசிரிய ஆசிரியைகள் பற்றியும், அங்கு படித்து வரும் மாணவர்களான வருங்காலத் தமிழர் பற்றியும் நாலு வரி எழுதியிருக்கலாமே!

புதுதில்லி—58, கமலா துரைமுத்து.

(பம்பாய்த் தமிழர் பற்றியோ அவர்கள் நடத்தி வரும் எல்லா அமைப்புக்கள் குறித்தோ முழுமையாக எழுதப் பட்டுவிட்டதாகக் கருதுவதற்கில்லை. இடமின்மையே காரணம். அவ்வப்போது பம்பாய்த் தமிழர் பற்றிய சுவாரஸ்யமான கட்டுரைகள் கல்கியில் இடம் பெறும். — ஆசிரியர்.)

* அலிகள் என்றாலே கிண்டலும் கேலியும் செய்யும் சினிமாத் துறைக்கும், பத்திரிகைகளுக்கும் இடையில் மனிதாபிமானத்துடன், அவர்களை அணுகி, அவர்களின் வேதனையை உணர்த்தும் ஒரு கட்டுரையைப் பிரசுரித்த உங்களைப் பாராட்ட வார்த்தைகள் இல்லை.

சிங்காரப்பேட்டை. வெ. இராமேஷ்நாதன்.

* பம்பாய்த் தமிழர் சிறப்பிதழ்கள் அள்ளித் தெளித்த வண்ணக் கோலங்கள் அருமை.

பம்பாய்—26, ஆர். சம்பத்குமார்.

* கோரேகானில் இருப்பது, 'கான கலா வித்யா நிலையம்.' மீயூஸிக் டிரயாங்கின் சாந்தாகுருஸில் இருக்கிறது. இந்த இரு சங்கங்களின் பெயர்களையும் சேர்த்துக் குழப்பியுள்ளார் செம்பூரான். மற்றபடி பம்பாய் சிறப்பிதழ் நன்றாக இருக்கிறது.

பம்பாய்—90, பி.எஸ். தேவராஜன்.

* 'நீறு பூத்த நெருப்பு', 'வெள்ளிச் சுவர்', 'செயலாளர் வேதராமன்' முதலிய நாடகங்களை எழுதியது ஆதி லட்சுமணன் அவர்களே.

பம்பாய். சிவகாமிபுத்திரன்.

* ப. தமிழர் சிறப்பிதழ்களுக்காக எவ்வளவு பாடுபட்டு இருக்கிறீர்கள் என்பதை அவ்விதழ்களின் ஒவ்வொரு பேட்டியும் கட்டுரையும் பறைசாற்றின.

வேலூர். லட்சுமி செங்குட்டுவன்.

* உதவாக்கரை அரசியல்வாதி ஆவதையும் உழைப்பவர்கள் உருகிப் போவதையும், ஏழையின் எதிர்பார்ப்புகள் ஏமாற்றங்கள் ஆவதையும் 'குஞ்சானியின் டாட்டா' தெளிவாகக் காட்டிவிட்டது.

சிங்காரப்பேட்டை. என். சங்கர்.

## நெடுமாறன் என்ன கறிவேப்பிலையா?

* திருநெல்வேலியில் அமைச்சர் ஆர்.எம். வீ.யை எதிர்த்து நெடுமாறன் போட்டியிட்டால் எப்படியிருக்கும்.... என்ற தங்களின் கற்பனை வேடிக்கையாக உள்ளது. அன்றும் சரி, இன்றும் சரி, அனைத்துக் கட்சியினராலும் நெடுமாறன் கறிவேப்பிலை போல் பயன்படுத்தப்பட்டு வருவதுதான் வேதனைக்குரிய விஷயம்!

நீடாமங்கலம். ராணி கோவிந்தகுமார்.

* அளக்குடி எல்லையில் செல்லும் கொள்ளிடம் வலது கரை ஆபத்தான நிலையில் உள்ளது உண்மையே. கரையின் நீளம் 580 மீட்டர். இந்த இடத்தை வலுப்படுத்த 1982—83ல் ரூ 66 இலட்சத்திற்கு மதிப்பீடு அரசால் ஒப்புதல் அளிக்கப்பட்டது. கட்டுரையில் குறிப்பிட்டது போல் ரூ 1½ கோடி அல்ல.

மேற்படி பணியைச் செய்ய 1983—84ல் டெண்டர் கோரப்பட்டது. தமிழ்நாட்டைச் சேர்ந்த திரு ஹெச். ஏ. முகம்மது, திருமங்கலக்குடி (ஆடுதுறை) ஒப்பந்தக்காரரின் டெண்டர்தான் ஏற்கப்பட்டது. இந்த இடத்தில் ஆந்திர நாட்டைச் சேர்ந்த காண்ட்ராக்டர் அரசுத் துறையுடன் ஒப்பந்தம் செய்து பணி செய்தார் என்பது தவறான தகவல்.

580 மீட்டர் நீளத்திற்குக் கரையை வலுப்படுத்த மதிப்பீடு ஒப்புதல் அளிக்கப்பட்டபின் ஸ்தலத்தை பார்வையிட்ட தலைமைப் பொறியாளர் (பாசனம்) வலுப்படுத்தும் வேலையில், மேலும் சில புதிய தொழில் நுட்ப யுக்திகளைச் செயல்படுத்த அறிவுரை வழங்கினார். அவரது ஆலோசனையின்படி 580மீ நீளத்தை 66 இலட்சங்களில் பணியை முழுமையாக முடிக்க முடியாததை உணர்ந்து வலுப்படுத்தும் கரையின் நீளத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. அதன்படி ஆரம்பத்தில் 185 மீட்டரும் இறுதியில் 105 மீட்டரும் ஆக கூடுதல் 290 மீட்டர் நீளத்திற்கே கரையை வலுப்படுத்த முடிந்தது. இடைப்பட்ட பகுதியை வலுப்படுத்தத் தனியே ஒரு மதிப்பீடு ரூ 84 இலட்சங்களுக்குத் தயாரிக்கப்பட்டு அரசு ஒப்புதலுக்காக அனுப்பப்பட இருக்கிறது.

பணியில் எந்தவிதத் தவறும் நடக்கவில்லை. ஆபத்தான இடத்தில் தற்காலிக பாதுகாப்பிற்குத்தான் சவுக்குமட்டு அடித்து முடசல் வேலை செய்யப்பட்டுள்ளது.

இரா. கற்பூர சுந்தரபாண்டியன்
இயக்குனர், செய்தி மக்கள்
தொடர்பு, தமிழக அரசு.
சென்னை—9.

(பணியில் எந்தவிதத் தவறும் நடக்கவில்லை என்ற உறுதிமொழியை ஏற்று மகிழ்கிறோம். அதே நேரத்தில் பாதி கிணறு தாண்டிய கதையாக இராமல் முழு பாதுகாப்புப் பெறும் நாளை இன்று பயந்து பயந்து வாழும் அளக்குடி மக்கள் ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள் என்பதையும் வலியுறுத்துகிறோம். — ஆசிரியர்)

மத்திய அரசுக்கு மாநிலங்கள் மீது அதிக அதிகாரம்
ஜியா
பயங்கர வாதிகள்
பஞ்சாப்; காஷ்மீர் எல்லை
அப்பாவி குடிமகன்
வாஜ்பாய்
மற்ற எதிர்க்கட்சிகள்
பின்னாலே அடிபடப் போகுது, பாருங்க!
தடியே வேணும், எதுக்கு?








# கல்கி

1986 ஆகஸ்டு 24
மலர் 45 இதழ் 4
அக்ஷய ஆவணி 8



# படிப்பார்வம், தமிழகத்தில் பரிதாபம்!

குழந்தைகள் கதகளி உடை அலங்காரம் செய்து கொண்டு நடனமாடினார்கள். மிக்கி மவுஸ், டொனல்ட் டக் போன்ற வால்ட் டிஸ்னி கதாபாத்திரங்களாக வேஷம் அணிந்து ஊர்வலம் சென்றார்கள். இத்தனை அமர்க்கள உற்சாகத்துடன் சென்னையில் மாணவர்கள் புத்தகக் கண்காட்சி ஆரம்பமாயிற்று. தேசிய ஒருமைப்பாடே கண்காட்சியின் லட்சிய நோக்கு என்றும் நல்ல புத்தகங்களை வாங்கி அறிவை வளர்த்துக் கொள்ள மாணவர்களுக்கு நல்ல வாய்ப்பு என்றும் கல்வி அமைச்சர் கூறியபோது பரவசத்தில் நெஞ்சு புடைத்துக் கொண்டது!

அடுத்தாற்போல், பாண்டிச்சேரி மத்திய பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் சே. வேங்கட சுப்பிரமணியம் பேச ஆரம்பித்தாரோ இல்லையோ, அமைச்சரின் பேச்சைக் கேட்டுப் பெருமிதத்தில் விம்மிப் பருத்த மார்பு புஸ்ஸென்று காற்றுப் போன பலூன் போல அடங்கிவிட்டது! துணைவேந்தர் கூறினார்: யுனெஸ்கோ சிபாரிசுப்படி ஒரு மனிதன் ஆண்டொன்றுக்கு இரண்டாயிரம் பக்கங்களேனும் படிக்க வேண்டும். ஆனால் சராசரி இந்தியன் படிப்பது ஆண்டொன்றுக்கு 32 பக்கங்கள்! அதிலும் 16 பக்கங்களைப் பாட புத்தகங்களிலிருந்துதான் படிக்கிறான்! இந்தப் பரிதாபத்தைப் பார்க்க யுனெஸ்கோவுக்கே சகிக்கவில்லை. மற்ற நாட்டினர் போல் இந்தியன் இரண்டாயிரம் பக்கங்கள் படிக்க வேண்டாம்; இருநூறு பக்கங்களாவது படிக்கலாமே என்று இலக்கை ஸ்பெஷலாகக் குறைத்து நிர்ணயித்து சிறப்புச் சிபாரிசு செய்திருக்கிறது! சுதந்திரம் பெற்று நாற்பது ஆண்டுகள் நம் தலைவர்கள் செங்கோலோச்சிய பிறகு நமது மக்களின் படிப்பார்வம் இந்த லட்சணத்தில் உயர்ந்திருக்கிறது!

எத்தனை தலைப்புக்களில் மேல்நாடுகளில் புத்தகங்கள் வெளியாகின்றன என்பதற்கும் வேங்கட சுப்பிரமணியம் புள்ளி விவரங்கள் தந்தார். அதைக் கேட்டபோது தலையில் முக்காடிட்டுக் கொண்டு ஒளியவே தோன்றியது. நம்மைவிட மக்கட் தொகையில் எவ்வளவோ குறைவான அமெரிக்கா, பிரிட்டன், ஜப்பான் ஆகிய நாடுகள் குழந்தைகளுக்காக வருஷா வருஷம் முறையே 4000, 2800, 2700 தலைப்புக்களில் புதிய புதிய புத்தகங்களை வெளியிடுகின்றன. நம் நாட்டில் 622! குறைந்த எண்ணிக்கையில் புதிய தலைப்புக்களில் நூல்கள் வெளியாகின்றன என்பதற்காகவே வருத்தப்படுவோமானால் மேல் நாடுகளில் ஒவ்வொரு தலைப்பிலும் எத்தனை பிரதிகள் அச்சிடுகிறார்கள் என்பதை அறிந்தால் மூர்ச்சித்தே விழுந்து விடுவோம்! அத்தனை பிரதிகளும் வெகு சீக்கிரம் விற்றுப் போக அடுத்தடுத்த ஆண்டுகளில் அடுத்தடுத்த பதிப்புக்கள் வெளி வந்த வண்ணமும் உள்ளன.

தமிழகத்தில்? குழந்தைகளுக்கான நூல் ஒன்று ஒரு பதிப்பு அச்சிடுவதென்றால் அதிகபட்சம் ஆயிரம் பிரதிகள்தான். இவை விற்பனையாகவே பதிப்பகத்தார் இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் காத்திருக்க வேண்டியிருக்கிறது. காரணம் தனி நபர் வருமானம், வாழ்க்கைச் செலவுக்கே போதவில்லை. எனவே புத்தகங்கள் வாங்கப் பணமில்லை. வசதி படைத்தவர்களோ கான்வென்ட்டில் படிக்கும் தங்கள் குழந்தைகளுக்கு ஆங்கில நூல்களை வாங்கித் தந்து விடுகின்றனர்! வசதியற்ற பெற்றோரும் அவர்களின் குழந்தைகளும் நூலகங்களைத்தான் நம்பியுள்ளனர்.

தமிழகத்தில் நாற்பதாயிரம் பள்ளிகள் உள்ளன. அவற்றில் மிகப் பெரும்பாலானவற்றில் நூலகங்களும் இருக்கின்றன. ஆனாலும் குழந்தைகளுக்கான நூல்கள் விற்பனையில் இப்படி ஒரு தேக்க நிலை. இவை தவிர பொது நூலகங்கள் வேறு உள்ளன. இவற்றில் புத்தகங்களை வாங்க ஓர் அதிசயமான நிபந்தனையை விதித்திருக்கிறார்கள். அதாவது பதிப்பாளர் புத்தகத்தின் விலையை என்னவாக வைத்திருந்தாலும் சரி, ஒரு பக்கத்துக்கு இவ்வளவு பைசா என்ற கணக்கில்தான் நூலகங்கள் ஆணைக் குழு நூல்களை வாங்கும்! இந்த நிபந்தனைக்கு உட்படுகிற எந்தப் பதிப்பாளர்தான் நல்ல படங்களுடன் கூடிய வண்ண வண்ணப் புத்தகங்களைக் குழந்தைகளுக்காகத் தயாரிக்க முடியும்? இதற்காகும் செலவை எப்படி ஈடு கட்ட இயலும்? படங்கள் இல்லாத குழந்தை நூல்கள், மலர்கள் இல்லாத பூங்கா போன்றதல்லவா?

தமிழகத்தில் நூலக இயக்கம் என்பது 'அந்தோ, பரிதாபம்!' என்ற நிலையில் இருக்கிறது. குறைந்தபட்சம், 'லைப்ரரி செஸ்' என்று வசூலிக்கப்படும் வரித் தொகையையாவது முழுக்க முழுக்க நூலகங்களுக்கு நல்ல நூல்களை வாங்குவதற்காக மட்டுமே செலவழிக்க வேண்டும். அதில் சம்பளம் கொடுத்தோம், கட்டடம் கட்டினோம், அல்லது வேறு அவசர இனங்களுக்குச் செலவிட்டோம் என்று கூறுவதை ஒப்புக் கொள்ள இயலாது. மக்களுக்குப் படிப்பார்வத்தை ஊக்குவதைவிட அவசர காரியம் வேறு இருக்கவே முடியாது! புத்தகக் கண்காட்சியைத் திறந்து வைத்து அமைச்சர் பாராட்டுக்களைப் பெற்றுக் கொண்டு பதிலுக்குப் பாராட்டி விட்டுப் போவதால் ஒரு பலனுமில்லை.

---

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

**ஹே**மா... ஹேமா... காப்பி ரெடியா?"

"இருங்க வர்றேன். சும்மா தொண தொணன்னு....! ஒரு கைல பேப்பர் இருந்தா, இன்னொரு கைல காப்பி இருந்தாகணுமா?"

"சீக்கிரம் கொண்டுவாம்மா. அப்பத்தான் ஒரு சுறுசுறுப்பு வரும்!"

"காப்பிக் கொட்டை விலே அது பாட்டுக்கு ஏறிக் கொண்டே போவுது. நீங்க என்னடான்னு ஆபீஸ் போறதுக்கு முன்னாடி நாலு கப் காப்பியாவது குடிச்சிடறீங்க!"

"ஆமா! உங்கப்பா காப்பித் தோட்டம் வைச்சிருக்காருன்னுதான் பேரு. அட்லீஸ்ட், ஒரு கிலோ காப்பிக் கொட்டையாவது நமக்கு அனுப்பியிருக்காரா?"

"எங்கப்பாவை வம்புக்கு இழுக்கலேன்னா உங்களுக்குப் பொழுதே போகாதே!"

(அந்தச் சமயம் காலிங் பெல் அடிக்கிறது.)

"யாரது? காலங்கார்த்தாலே போய்ப் பாரு ஹேமா..."

(கதவைத் திறக்கிறாள் ஹேமா.)

"அட, அப்பா! வாங்கப்பா, நூறு ஆயுசு! என்ன இப்படித் திடீர்னு வந்துருக்கீங்க? ஒரு லெட்டர் போடக் கூடாதா?"

"அவசர வேலையா வர வேண்டியதாப் போச்சு!"

(உள்ளே வருகிறார்.)

"என்ன சேகர் சௌக்கியமா?"

"வாங்க மாமா... காப்பியைப் பத்திப் பேசிக்கிட்டு இருந்தோம்... உங்க நினைவு வந்துச்சு. உடனே காப்பி எஸ்டேட்காரரான நீங்களே வந்துட்டீங்க! காப்பியில் இந்த வருஷம் நல்ல லாபம்தானே, மாமா!"

"அந்த வயிற்றெரிச்சலே ஏன் கேக்கறீங்க, மாப்பிள்ளே?"

"என்னங்க மாமா இப்படி அலுத்துக்கறீங்க?"

"ஆமா! உங்களுக்கு ஏழு வருஷத்துக்கு முன் ஹேமாவை கல்யாணம் பண்ணிக் கொடுத்தேனே... அப்போ எவ்வளவு சம்பளம்...?"

"எதுக்குக் கேக்கறீங்க?"

"அட சும்மா சொல்லுங்க மாப்பிள்ளே!"

"ஆயிரம் ரூபாய்!"

"இப்போ எவ்வளவு வாங்கறீங்க?"

"ஆயிரத்தைந்நூறு ரூபாய்!"

"அதான் கேட்டேன். நாட்டிலே எல்லோருக்கும் சம்பளம் உயர்ந்திருக்கு. காப்பிச் செடிக்குப் போட உரம், பூச்சிக் கொல்லி மருந்து, மின் கட்டணம், பெட்ரோல், டீசல், ஆயில், வரி எல்லாம் ஏறியாச்சு... அவ்வளவு ஏன்? நீங்க வாங்கற காப்பிக் கொட்டையின் விலையும் ஏறிக்கிட்டே இருக்கு. ஆனா ஒண்ணே ஒண்ணு மட்டும்தான் ஏறவே மாட்டேங்குது!"

"அது என்னங்க மாமா?"

"அதுதான் மாப்பிள்ளே காப்பி வாரியம் எங்களுக்கு கொடுக்கிற விலே. கடந்த ஏழு வருஷமா, ஒரு கிலோவுக்கு பதினான்கு ரூபாய் தான் கொடுத்துக்கிட்டு வர்றாங்க!"

"என்னப்பா இது! பதினாலு ரூபாயா?



* காப்பிக் கொட்டை தரம் பிரித்துச் சுத்தம் செய்யப்படுகிறது.

நாங்க முப்பத்தெட்டு ரூபாய் கொடுத்துல்ல காப்பிக் கொட்டை வாங்கறோம்."

"அதுதாம்மா சொன்னேன்... இருக்கிற நிலைமைலே காப்பி விவசாயமும் வேண்டாம்; ஒன்றும் வேண்டாம்னு பார்க்கறேன்."

"ஏன் மாமா... காப்பித் தோட்டத்துக்குள்ளேயே மலைவாழை போடுவீங்களே... அதிலே கொஞ்சம் சமாளிக்கலாமே!"

"அதுவும் முடியலேயே. முடிக்கொத்து நோயாலே இப்போ மலைவாழை போடறதுன்னாலே பயமா இருக்கு!"

"அது சரி, உங்களுக்கு பாங்க் கடனெல்லாம் கிடைக்கிறதில்லையா?"

"அந்தக் கதையை ஏன் கேக்கறீங்க. விவசாயக் கடன் கார்ப்பரேஷன் மூலம் கடன் கொடுத்தாங்க. அந்தக் கடனைக் குறைஞ்ச வட்டிக் கடனா மாத்தச் சொல்லி ரிசர்வ் பேங்க் யோசனை சொன்னது. ஆனா விவசாயக் கடன் கார்ப்பரேஷன் அதுக்கு ஒப்புக்கலே. பதினாலு சதவீதம் வட்டி. வட்

## "எத்தனை கப் காப்பி சாப்பிட்டாலும் எங்கள் தலைவலி தீராது!"

டிக்கு வட்டின்னு குட்டி போட்டுக்கிட்டே போவுது... தோட்டத்தையே வித்துத்தான் கடனே அடைக்கணும் போல இருக்கு..!''

''அச்சச்சோ!''

''சரி... அதுதான் இப்பமுன்னு இந்தத் தமிழ்நாடு அரசு வேறே நடுவிலே புகுந்து ஒரு குளறுபடி செஞ்சிருக்கு. அகில இந்தியா விலும் ஒரு ஹெக்டேருக்கு 650 கிலோதான் மகசூல். ஆனா விவசாய வருமான வரியைக் கணக்கிடும் போது ஹெக்டேர்ங்கிறதை ஏக்கர்னு தப்பாக்கணக்குப்போட்டுடிச்சு தமிழக அரசு. அதனாலே நாலு மடங்கு அதிகமா விவசாய வருமான வரி கட்ட வேண்டியி ருக்கு!''

''இதைநீங்க அரசாங்கத்துக்குத்தெரிவிக்க லையா?''

''சொல்லியாச்சே. எஸ். டி. எஸ். மந்திரியா இருந்தப்போ அவரும் நிலைமை யைப் புரிஞ்சிட்டு 'நீங்க மதிப்பீடு செஞ்ச திலே பாதி கட்டினால் போதும்னார்! ஆனா அவர் போனதும் வந்த நெடுஞ்செழியனே 'நீங்க மதிப்பீடு செஞ்சதைக் கட்டித்தான் ஆகணும்கிறார். முடியாதுன்னா கோர்ட் டுக்குப் போங்களேன்னு சொல்லிட்டார்!

''ஏன் மாமா காப்பி பதனிடும் (Curing) உரிமையை காப்பி உற்பத்தியாளர்களுக்கே தரணும்னு நீங்க முன்னாடி ஒரு தடவை சொன் னீங்களே; அந்தக் கோரிக்கை என்னாச்சு?''

''அது கிடப்பிலேதான் கிடக்கு. காப்பிக்கு தோல் நீக்கும் (Hulling) உரிமையைக் கொடுத்த காப்பி வாரியம் பதனிடும் உரிமையை ஏன் கொடுக்க மாட்டேங்கிற துன்னு தெரியல்ல. 'பிளான்டேஷன், பியரின் னெல்லாம் தரம் பார்க்கிறது, காப்பி வாரியத் தின் கீழே செயல்படற பதனிடும் தொழிற் சாலைங்கதான். என்ன செய்யறது? காப்பி வாரியத்திலே, முன்ன மாதிரி விவசாயிங்க பிரதிநிதிங்க செயல்படறதில்லே. அங்கிருக் கிற ஐ. ஏ. எஸ். களுங்களுக்கு காப்பி விவ சாயிகளின் நிலைமையே புரியலேன்னுதான் சொல்லணும். கர்நாடகாவுலே மகசூல் கூடுத லாக இருக்கிறதாலும் உற்பத்திச் செலவு குறைவாக இருக்கிறதாலும் அங்கிருக்கிறவங் களுக்கு ஓரளவு லாபம் கிடைக்கிறது. இங்க அப்படி இல்லையே?''

''உங்க காப்பி விவசாயத்துல இவ்வளவு பிராப்ளம்ஸ் இருக்கா?''

''இது மட்டும்தானா மாப்பிள்ளே! 1983 ஆம் வருஷம் நாங்க உற்பத்தி செஞ்ச காப்பிக்கு எங்களுக்கு இன்னமும் பணம் வந்துசேரலேன்னா நாங்க எப்படிச் சமாளிக்க முடியும்னு சொல்லுங்க?''



காப்பித் தோட்டம்

## புள்ளி விவரங்கள் ஒரு கப்!

ஒரு காப்பிச் செடியின் சராசரி வயது நாற்பது வருடங்கள். இந்தியாவில் சுமார் 1,80,000 டன் காப்பி உற்பத்தி செய்யப்படுகிறது. இதில் 65,000 டன் உள்நாட்டிலும் 85,000 டன் வெளிநாட்டிலும் விற்கப்படுகிறது. உயரிக் காப்பி ரஷ்யாவுக்கு ஏற்றுமதி செய்யப்படு கிறது; அதுவும் நாற்பது சதவிகிதம் தள்ளுபடி விலையில்! அந்தத் தள்ளுபடித் தொகையை ஈடுகட்ட, விவசாயி களின் தலையில்தான் கைவைக்கிறது அரசு. காப்பி உற்பத்தியில் முதலாவது கர்நாடகா, அடுத்து கேரளா, மூன்றாவதுதான் தமிழ்நாடு. தமிழ் நாட்டில் கோயமுத்தூர், சேலம், நீலகிரி, மதுரை, அண்ணா மாவட்டங்களில் காப்பி பயிரிடப் படுகிறது. தமிழ்நாட்டில் காப்பி உற்பத்தி 14,000 டன். ஆனால் தேவையோ 22,000 டன்! அண்ணா மாவட்டத்தில் மட்டும் பதினைந்தாயிரம் காப்பி விவசாயிகள் இருக்கிறார்கள். இதில் நூறு பேர்தான் பெரும் விவசாயிகள். காப்பிமூல மாக நமக்குக் கிடைக்கும் அந்நியச் செலாவணி இருநூறு கோடி ரூபாய். சுங்க வரிகள் மூலம் ஏழு கோடி ரூபாயும், ஏற்றுமதி வரி மூலமாக நாற்பது கோடி ரூபாயும் மத்திய அர சுக்கு வருமானமாகக் கிடைக்கிறது. மாநில அரசுக்கு (தமிழ்நாடு) விற்பனை வரி மூலம் நான்கு கோடி ரூபாய் கிடைக்கிறது. இந்தியாவில் 21 ஆம் நூற் றாண்டு ஆரம்பத்தில் காப்பி உற்பத்தி இரண்டு லட்சம் டன்னைத் தாண்டிவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது!

"நிஜமாவா சொல்றீங்க? ரொம்ப ஆச்சரியமா இருக்கே!"

"காப்பிக் கொட்டையைக் கொண்டு போய்க் காப்பி வாரியத்திடம் கொடுத்த மறுநிமிஷமே பணம் கொடுத்துடுவாங்கன்னு நினைக்கிறீங்களா? கிடையவே கிடையாது. நாம் பயிர் பண்ணற காப்பிக் கொட்டையைப் நேராப் பதப்படுத்தும் இடத்திற்கு எடுத்துக் கிட்டுப் போகணும். அங்கே பதப்படுத்தப் பட்டு, அதிலே 'மாதிரி'க்குக் கொஞ்சம் எடுத்து பெங்களூருக்கு அனுப்புவாங்க! அங்கே காப்பிக் கொட்டை வாங்கும் வியாபாரிங்க வருவாங்க. அவுங்க 'மாதிரி' களைப் பார்த்து ஏலம் எடுப்பாங்க. ஏலத்தில் அதிகத் தொகை கேட்டவருக்கு சம்பந்தப் பட்ட 'மாதிரி' உள்ள பதனிடும் தொழிற் 'சாலையைச் சொல்லுவாங்க. அங்கே வந்து அந்த வியாபாரி சரக்கை எடுத்துக்குவார். இந்த விஷயமெல்லாம் முடிய எவ்வளவு காலம் ஆகும்னு பார்த்துக்கோங்க. அதனாலே தான் எங்களுக்கு 'பேமெண்'டும் லேட். வியாபாரி செலுத்த வேண்டிய சுங்கத்தீர்வை மாநில விற்பனை வரி, போக்குவரத்துச் செலவு... இப்படிப் பல. அதான் எங்களுக்குக் காப்பி வாரியம் கொடுக்கும் தொகையை விட மூணும் டங்கு அதிக விலைக்கு உங்களுக்கு விற்கப்படுது. எங்கள் விளைச்சல் 'ஓகே' ஆனதும் தொகையில் ஐம்பது சதவிகிதத்தையாவது காப்பி வாரியம் எங்களுக்கு அட்வான்ஸாகக் கொடுத்தாச் சிரமம் கொஞ்சம் குறையும். காப்பி வாரியத்தில் 'Pool Fund'ன்னு ஒண்ணு வெச்சிருக்காங்க. அதிலிருந்து கொடுக்கலாம்... சரி... சரி, நான் பாட்டுக்கு என் கஷ்ட புராணத்தையே பாடிக்கிட்டு இருக்கேன். உங்களுக்கு போரடிக்கப் போவுது. ஒரு கப் காப்பி கொடும்மா" என்று சோர்வுடன் அமர்ந்தார் திண்டுக்கல்லிலிருந்து வந்த கோவிந்தன்.

— ப்ரியன்

# இப்படியும் ஒரு போட்டி!



சாலையோர ஆக்கிரமிப்புக்களை சென்னையில் மலைச்சாமி இடித்துத் தள்ளிய மாதிரி, திண்டுக்கல் நகரிலும் இடித்துத் தள்ளினார்கள். அதில் காமராஜ் சிலைக்கருகில் இ. காங்கிரஸார் கட்டியிருந்த சஞ்சய் காந்தி மன்றக் கட்டடமும் ஒன்று. ஆனால், அதே திண்டுக்கல்லிலுள்ள ஐந்தர்லாந்து ரோடில், அ.இ.அ.தி.மு.க. வைச் சேர்ந்த தொழிற்சங்கத் தலைவர் முத்து கோபால் என்பவர் சாலையை ஆக்ரமித்துக் கட்டியிருந்த கட்டடத்தை (படத்தில் உள்ளது) இடிக்கவில்லை. அதனால் சஞ்சய் காந்தி மன்றத்தினர் மீண்டும் அதே இடத்தில் கட்டடத்தை எழுப்பி விட்டனர். நகராட்சியினர் கேட்டபோது, 'நீங்கள் எப்போது முத்து கோபாலின் கட்டடத்தை அகற்றுகிறீர்களோ, அப்போது நாங்களே எங்கள் கட்டடத்தை அகற்றி விடுகிறோம்!' என்று சொல்லி விட்டார்களாம்! போட்டி, எப்படி பார்த்தீர்களா?



ஊழியர்: ஒவ்வொரு நாளும் எனக்கு மட்டும் ஹெவி வொர்க்கா கொடுக்கறீங்களே ....?

மானேஜர்: அதுக்கு என்னய்யா பண்ண முடியும்! உமக்கு முடியலேன்னு ராஜினாமா எழுதிக் கொடு!

ஊழியர்: அதையேதான் சார் நானும் உங்களுக்குச் சொல்ல விரும்பறேன்!

— மணியன் தர்மலிங்கம்

# மும்தாஜ் யாசீன்

பெண் இனத்தையே பூண்டோடு ஒழிக்க நினைத்தான் சந்துரு. குறிப்பாகப் பதினெட்டு வயசுக்காரிகளை. கீச் கீச்சென்று பேசி, மனத்தைக் கவ்வி, சுகம் தெளிவதற்குள் சரேலென்று விலகி விடுகிறவள்களை —

நந்தினி!

கசப்பை விழுங்குகிற மாதிரி சந்துரு கண்களை மூடிக் கொண்டான். புலனுக்கு அடங்குகிற விஷயமா இது?

நேற்றைய மாலைச் சம்பவம் நினைவுக்கு வந்தது. விஷ நாக்கில் இனிப்பைத் தடவிய அவளது பேச்சு...

''உங்களை என் மனசில் நினைச்சிருந்தேன்கிற சந்தோஷம் போதும் சந்துரு... நம்ம பார்வை, ஆசை, சிநேகிதம், இப்ப இந்த மணல்ல உக்காந்து பேசறது எதுவுமே மறக்காது எனக்கு. இளமையைப் பத்தின கனவுகள்ல உங்க முகம் மட்டும்தான் எப்பவும் ஞாபகம் இருக்கும்...''

தோரணையிலும், குரலிலும் கொஞ்சம் வித்தியாசத்தை உணர்ந்தான் சந்துரு. ஆனால், இடியைத் தூக்கிப் போடப் போகிறாள் என்று அப்போது கூடத் தெரியவில்லை. ''என்னத்துக்கு இவ்ளோ நீளமாப் பேசறு?'' என உள்ளே யோசனைகள் ஓட, 'பட்'டென்று உடைத்தாள்.

''எனக்குக் கல்யாணம் நிச்சயமாயிருச்சு சந்துரு...''

ரொம்ப அழுத்தமாய், திடமாய், யோசித்த வார்த்தைகளாய், அவனது முகத்தைப் பார்த்தபடியே...

எவ்வளவு நெஞ்சழுத்தம் இது?

ஆடிப் போனான், 'ஜிவ்'வென்று அடி வயிறு புரள மலைமுகட்டிலிருந்து சரிகிறவனைத் தவித்தான். ''நிஜமா... நிஜமா...?'' எனக் கேட்டு, ''நந்தினி...'' என நடுங்கிப் பேச முடியாமல் விலகி, திரும்பி நின்று கண் கலங்கி...

''இளமைங்கிறது வாழ்வில் ஒரே ஒரு தரம் தான். கெட்டுப் போற எத்தனையோ பெண்களுக்கு மத்தியில நான் அதிர்ஷ்டக்காரின்னு சொல்லணும். உங்களை மாதிரி ஒரு நல்லவர் யாருக்குக் கிடைப்பார்? ஆனா வீட்ல விட மாட்டாங்க போலிருக்கு சந்துரு...''

''......''

''அவருக்கு ஆயிரம் ரூபாய் சம்பளம். கேரளாவுல எஸ்டேட் வேலை. லவ் பண்றது ஈஸி. வாழ்ந்துடறதுதான் கஷ்டம்னு புரியுது...''

''நிறுத்து... உனக்குக் கஷ்டம். அவ்வளவு தானே...?''

''சந்துரு... நான்...''

''விஷ் யு குட் லக்...''

இரண்டு நாட்களாகி விட்டன. இன்னும் அதிர்ச்சி குறையவில்லை. வேலைக்குப் போக, குளிக்க, சாப்பிட, மற்றவர்களிடம் பேச முடியவில்லை. குப்புறப்படுத்துக் கொண்டு, கண்கலங்க, வெறித்தபடி விட்டத்தைப் பார்க்கத்தான் முடிந்தது.

சண்டாளி...

''ஏண்டா... தலைவலி எப்படி இருக்கு? இன்னிக்காச்சும் வேலைக்குப் போவியா?''

அம்மா அவனது நெற்றியைத் தொட்டுப் பார்த்துக் கேட்டாள். இளம்காலை. அதற்குள் குளித்திருந்தாள். நெற்றியில் 'பளிச்'சென்று திருநீறு...

தலைவலிக்கு இரண்டு நாள் லீவு அதிகம் என்று நினைக்கிறாளோ? நெஞ்சு வலி எனச் சொல்லி இருக்கலாமோ?

அப்படி என்ன ஜில்லா கலெக்டர் வேலை? ஹோட்டல் கணக்குப் பிள்ளை. பில் எழுதுகிற ஆள். இரண்டு இட்லி 75 காசு. தோசை ரூ. 1.50... காப்பி... போகாததில் இவனுக்கோ, முதலாளிக்கோ, பெரிய நஷ்டம் ஒன்றும் இல்லை. இரண்டு நாட்களாய்ச் சீனி எழுதிக் கொண்டிருப்பான். சர்வர்களில் எட்டாம் வகுப்பு வரை படித்தவன். பில் கிளார்க் வேலையில் குறி அவனுக்கு.

ஒவ்வொருவரும் எதையாவது குறி வைத்துத்தான் நகர்கிறார்களோ? அதுதான் அம்மாவின் இந்தக் கேள்வியாகவும், நந்தினியின் விலகலாகவும் அமைகிறதா? அவளது குறி ரொம்பவும் அற்பமாகத் தெரிந்தது... பணம்...

ஆயிரம் ரூபாய்ச் சம்பளக்காரனைக் கண்டதும் தன்னை ஒதுக்கியவள், லட்ச ரூபாய்க்காரன் அகப்பட்டால் அவனையும் விலக்குவாளா?

''என்னடா...? காதுல விழுந்துச்சா?...?''

''முடியலைன்னா விட்டுடும்மா. சரியானதும் போகட்டும். முதலாளிகிட்ட நான் சொல்லிக்கிறேன்'' அண்ணன் — ரூத் பிரஸைத் தேடி வந்தவன், அம்மாவிடம் சொன்னான். சுவாரஸ்யமான ஆள் அவன். எதையும் எளி



தாக எடுத்துக் கொள்கிற சுபாவம்.

''என்னடா சந்துரு... அந்த இண்டர்வியூ எத்தனையாவது? இருபத்தஞ்சு ஆனதும் சொல்லிடு... விழா எடுத்துரலாம்'' எனச் சிரிப்பான்.

இருவருக்கும் ஒரே படிப்புத்தான். பி.காம். தனக்கு மட்டும் ஏன் ஹோட்டல் ஸ்டூலில் உட்காரும் நிலை நேர்ந்துவிட்டது?

''என்ன சந்துரு... டாக்டர்கிட்டப் போறதுல என்ன கஷ்டம்...? ஊசி போட மாட்டார் கண்ணு. நல்லவரு... மாத்திரையில் சாக்லேட் வாசனை வரும். இனிப்பு மருந்து தரச் சொல்றேன்...''

சந்துருவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

''இன்னிக்கு வேலைக்குப் போறேன்...'' என்றான்.

''தலைவலின்னே:...''

''இப்ப சரியாயிருச்சு...''

''குட்...''

அண்ணன் பாத்ரூமிற்குப் போய்விட்டான்.

குளித்து, உடை மாற்றிக் கொண்டு சந்துரு வெளியே வந்தான். தூசியைத் தட்டி சைக்கிளில் ஏறி அமர்ந்தான். வெயில் கசிரென்றது. அது மழையாக இருந்தால் மட்டும் என்ன? அவனைப் பொறுத்தவரை மாறுதல் எதுவும் கிடையாது. ஆறு மணிக்கு எழுந்து சகலத்தையும் முடித்து ஆறே முக்காலுக்குப் புறப்பட்டால் ஏழு மணிக்கு ஹோட்டல் வாசல். முறுகல் தோசை வாசனை, சாம்பார் மணம், சட்னி நெடி...

நந்தினி இன்றைக்கு வேலைக்கு வருவாளா?




ஆயிரம் ரூபாய்ச் சம்பளக்காரனைக் கட்டிக் கொள்ளப் போகிறவளுக்கு இனி அது அவசியம் இல்லைதான். வாழ்க்கையை எவ்வளவு சுலபமாக எடுத்துக் கொண்டு விட்டாள்?

யோசித்துப் பார்க்க ஒவ்வொரு கட்டத்திலும் அவள் சாமர்த்தியமாக நடந்து

கொண்ட மாதிரியே தெரிந்தது.

ஆறேழு மாதங்களாகத்தான் அவளைத் தெரியும். மனத்தில் ஒரு சிறிய புள்ளி. எதிரில் தினமும் சந்திக்கிறவள், அழகானவள் என்கிற அளவில் மட்டும். அதில் கோடுகளை இணைத்துச் சித்திரமாக்கியது அவள்தான். அவளைக் கண்டதும், பரபரப்படைந்து, கன்னம் சிவந்து, மாராப்பைச் சரி செய்து, ஓரக் கண்ணால் பார்த்து...

சந்துரு 'லோபி' இல்லை. பெண்களை சினிமாப்பாட்டால்கேலிசெய்தவன் இல்லை. சீழ்க்கை அடித்துப் பின்னால் போனவன் இல்லை. அவளைப் பார்த்த பிறகு அத்தனையும் செய்ய வேண்டும் போல இருந்தது.

பல வகையான கற்பனைகள். தூக்கத்தில் கண்ட கனவுகள். எப்படியாவது அவளிடம் பேச வேண்டும் என்கிற ஆசை. ரொம்ப ரொம்ப யோசனைகளுக்குப் பிறகு, குறைந்த பட்சமாக ஒரு ''ஹலோ...'' சொல்வது என்றும், ரியாக்ஷனைப் பொறுத்துத் தொடருவது என்றும் முடிவு செய்து கொண்டான்.

முதல் நாள் பல ஒத்திகைகள் பார்த்து, முன்னதாகவே புறப்பட்டு, அவள் வருகிற பாதையில் ஜன சந்தடியற்ற ஓர் இடத்தில் காத்து நின்று, அடிக்கடி கடிகாரத்தைப் பார்த்து, அலுத்துச் சலித்த பிறகு, அவளைக் கண்டதும் நாக்கு எழும்பவில்லை. படபடவென்று வந்தது. என்ன செய்கிறோம் என்று தெரியாமலேயே சைக்கிளை மிதித்துக் கொண்டு வேகமாகப் போய் விட்டான். கொஞ்ச தூரம் போன பிறகு அவனுக்கே வெட்கமாக இருந்தது-தானும்ஒருவாலிபனா? உதட்டுக்கு மேலே மீசை எதற்கு என்று கூட நினைத்தான். தனக்கு மட்டும் அல்ல. வேறு சில நல்ல குடும்பத்துப் பையன்களுக்கும் அப்படித்தான் இருந்ததாகப் பின்னால் தெரிந்தது. சீனி சொன்னான்.

''அடிச்சக்கை... லவ்வா? உன் வயசுல நானும் பண்ணினவன்தான். சரியாத்தான் தேடி வச்சிருக்கே. ஆனா கண்ணு... மாட்டிக்காதே...''

''......''

''பொம்பளை சிரிக்கிறாளேன்னு பின்னால போகாதே. காரியம் கெட்டுச்சு.....''

''சீனி... லவ் மேரேஜ் பண்ண ஆளு நீ... இப்படிப் பேசலாமா?''

''நான்தான் இப்படிப் பேசணும். தி சக்ஸஸ் இன் லவ் ஈஸ் தி ஃப்பெயிலியர் ஆஃப் லைஃப்னு எங்கப்பா சொன்னாரு. இங்கிலீஷ் படிச்சவரு அவரு. நான் கேக்கலே. இப்ப சாதா ஒண்ணேய்ன்னு கத்திக்கிட்டு இருக்கேன்...

''தொழில்ல என்ன கேவலம் சீனி?''

''ஒண்ணுமில்லே.வாஸ்தவம்.காசு பத்தலே வேடா...''

அவன் அந்த ரீதியில்தான் பேசுவான் எனத் தோன்றவே, சந்துரு பேச்சை வெட்டிக் கொண்டான். காதலுக்கு இன்னொருத்தனிடம் யோசனை கேட்கிறவன் முட்டாள். இது தனது பிரச்னை. தான் மட்டுமே சமாளிக்க வேண்டும்.

அடுத்த நாள் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, ''ஹலோ...'' என்றான். அதை ஆமோதித்துப் புன்னகையுடன் தலையைக் குனிந்தாள் — நந்தினி.

உற்சாகம் பிய்த்துக் கொண்டு போனது. பிறகென்ன?

— நூறு ஹலோக்கள்,

— ஆயிரம் குட்மார்னிங்.

— இன்னிக்கு ஏன் லேட்?

— இந்தப் புடைவை நல்லா இருக்கு நந்தினி!

''தினமும் எங்க போறீங்க.... டைப் பழகவா?'' என ஒருநாள் கேட்டான்.

''இல்லே... வேலை பார்க்கிறேன்...''

''எங்கே?''

அன் குவாலிஃபைட் நர்ஸாக இருந்தாள். டாக்டரின் பெயரைச் சொன்னாள். அவனது வீட்டிற்கு இரண்டு தெரு தள்ளி இருந்தது கிளினிக். அப்படியொன்றும் பிரபலமான டாக்டர் அல்ல அவர். என்ன சம்பளம் தந்து விடப் போகிறார்? இதற்காகவா இவ்வளவு சீக்கிரம்-எழுந்து 'லொங்கு, லொங்கு' என்று நடந்து போகிறாள்? தன்னைப் போலவே கஷ்டப்படுகிற ஜீவன் என்று தெரிந்து, கொஞ்சம் பரிதாபமாக இருந்தது. வயதுக்கு வந்த பெண்ணின் இவ்வளவு குறைந்த சம்பளம் தேவைப்படுகிற அளவுக்கு வசதியில்லாத குடும்பமா?

''நீங்களும் வேலையில் இருக்கீங்களா?''

''ஆமா...''

''என்ன வேலை?''

''ரொம்ப பெரிய வேலை'' எனச் சிரித்தான் அவன்.

அடுத்த நாள் காலை கிளினிக்கில் ஆஜரானான்..

''தலை வலிக்கிறது... டாக்டர்...''

கொட்டாவி விட்டுக் கொண்டிருந்தவர், ''மெடிகல் சர்ட்டிபிகேட்டா?'' என்றார்.

''இல்லே சார்... தலைவலி!''

தன் ஆயுளில் வெறும் தலைவலிக்காக எவனும் அவரிடம் வந்ததில்லை.

நந்தினி டாக்டரின் முதுகுக்குப் பின்னால் நின்று சிரித்தாள்.

''என்னைப் பார்க்க ஊசிக் குத்தையும் ஏற்றுக் கொள்ள வந்தவனே...'' என அந்தச் சிரிப்பு சொல்லிற்று. அவனைப் பார்த்து ஒரு பெண் சிரித்த முதல் சம்பவம் அது! நினைக்க நினைக்கப் பரவசமாக இருந்தது. அவள் மீது மேலும் மேலும் பிரியத்தை வளர்த்தது.

அப்படியே தழைத்து வளர்ந்திருக்க வேண்டிய உறவுதான் அது.

நாசமாய்ப் போன டாக்டர்தான் அதைக் கெடுத்தவர். ஒருநாள் குடும்பத்தோடு எங்கேயோ போனவர், நந்தினியையும் அழைத்துக் கொண்டு சாப்பிட அவனது ஹோட்டலுக்கே வந்து தொலைத்தார்.

வியாபார நேரம். ஆளுக்கு ஆள் சந்துருவிடம் 'ட்ரில்' வாங்கிக் கொண்டிருந்தார்கள். நந்தினி எல்லாவற்றையும் பார்த்தபடி இருந்தாள்.

அடுத்தநாள் அவளைப் பார்த்ததும், "இது தான் நீங்கள் சொன்ன பெரிய வேலையா?" எனக் கேட்டான். முகத்தில் கொஞ்சம் ஏளனம். கொஞ்சம் அலட்சியம். "என்னை ஏமாத்திட்டியே..." என்ற கோபம்.

"பி. காம் படிச்சிருக்கேன் நந்தினி. நிறைய இண்டர்வியூக்களுக்குப் போறேன். சீக்கிரம் நல்ல வேலை கெடைச்சிடும்..."

"நானும் பி. எஸ்.ஸிதான். நம்பிக்கை எப்பவோ போயிருச்சு சந்துரு..."

அன்றைக்கு அவர்கள் வேறு எதைப் பற்றியும் பேசவில்லை. அடுத்த சில தினங்கள் கூட வெறும் ஹலோவோடு போய்விட்டது. அதன் பிறகுதான் நேற்றைய சந்திப்பு. பீச்சுக்கு வரச் சொல்லி அவளை கூப்பிட்டான். கொஞ்சம் தயக்கத்திற்குப் பிறகு மடமடவென்று பேசினான்.

"எங்கப்பாவுக்கு வாட்ச்மேன் வேலை. இருவது வருஷம் சர்வீஸ். இப்பத்தான் அறு நூறும் சொச்சமும் வாங்கறார். எங்கம்மாவை லவ் பண்ணிக் கட்டியிருக்கார். நாங்க நான்கைந்து உருப்படி. சண்டை இல்லாத நாளே கிடையாது. சந்தோஷம்னா என்னன்னே தெரியாது எங்களுக்கு. வறுமை எல்லாத்தையும் கொன்னுடும் சந்துரு. ஏன் தான் பண்ணிக்கிட்டோமோன்னு பின்னாடி வருத்தப்படறதைவிட நரகம் வேறொண்ணும் கிடையாது. எங்க வீடே உதாரணம். லவ்வுக்காகக் கல்யாணம்ங்கிறதைவிட, சந்தோஷத்துக்காகப் பிரியறது எவ்வளவோ நல்லது... என்ன சொல்றீங்க...?"

"சீக்கிரமே எனக்கு ஒரு வேலையைத் தேடிக்கிறேன் நந்தினி..."

"அதுவரைக்கும் எங்க வீட்ல காத்திருக்கணுமே..."

"அப்ப..."

"லெட் அஸ் ஸே குட் பை..."

மங்கலான வெளிச்சத்திலும் அவளது கண்கள் பளபளத்தன.

அவன் அறிந்து எந்த ஒரு பெண்ணும் இவ்வளவு தைரியமாய்ப் பேசியதில்லை.

"என்னப்பா ரெண்டு நாளா காணோம்? சொல்லாம லீவு போட்டுட்டே?" சந்துருவைக் கண்டதும் முதலாளி 'சுள்'ளென்று எரிந்து விழுந்தார்.

சொன்னான்.

"வந்து லீவு சொல்லிட்டுப் போயிருக்கணும். அதான் முறை. உங்கண்ணனுக்குப் பெரிய உத்தியோகம். நாளைக்கு உனக்கும் வேற நல்ல வேலை கிடைக்கலாம். ஆனா எங்கியும் தொழில்ல பக்தி வேணும்...."

ஹோட்டலே அவனைப் பார்த்தது.

"போ... இனிமே இப்படிச் செய்யாதே..."

தலையைக் குனிந்தபடி தன்து இருக்கைக்கு வந்தான்.

"வந்துட்டியா...? என்ன ஒத்தத் தலை வலியா?" சீனி இருக்கையை விட்டு எழ, "உங்கிட்ட கொஞ்சம் பேசணும் சீனி..." என்றான் சந்துரு.

# பரிசு ரூ 300

## வாசகர் பட்டி மன்றம்-4



**பெண்கள் வேலைக்குப் போவதால் —**

* **சமுதாயப் பிரச்னைகள் அதிகரித்துள்ளன!**

* **சமுதாயப் பிரச்னைகள் குறைந்துள்ளன!**

உங்கள் கருத்து என்ன?

குடும்பம் என்பதும் சமுதாயத்தில் ஓர் அங்கம் என்பதை நினைவில் கொண்டு அனுபவ பூர்வமாக வாதாடுங்கள். கல்கியில் சுமார் அரைப்பக்கத்திற்கு வருகிறமாதிரி கட்டுரை எழுதி அனுப்புங்கள். இருதரப்பிலும் இரு கட்டுரைகள் பிரசுரமாகி ரூ. 100 பரிசு பெறும்.

மற்றும் இரு கட்சிகளிலிருந்தும் ஐந்து ஐந்து கட்டுரைகளிலிருந்து முக்கிய பகுதி மட்டும் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பிரசுரமாகும். அவற்றுக்குத் தலா ரூ. 10 பரிசு.

தவிர இருதரப்பும் பெறும் மதிப்பெண்கள் வெளியிடப்படும்.

**முடிவு தேதி: செப்டம்பர் 8**

உறையின் மீது 'வாசகர் பட்டி மன்றம்—4' என்று மறக்காமல் குறிப்பிடவும்.

கீழே உங்கள் விலாசத்தை எழுதி இந்த அரைப் பக்கத்தை உங்கள் கட்டுரையுடன் இணைக்க வேண்டும் என்பது முக்கிய நிபந்தனை.

பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................



ஸங்கீத கலாநிதி செம்மங்குடி R. ஸ்ரீநிவாஸய்யர் பௌத்ரனும் ஸ்ரீ S.ஸ்வாமிநாதனது (of Bombay) புத்ரனுமான சிரஞ்ஜீவி ஹரிஹரனுக்கும் (U.S.A.) பங்களூர் ஸ்ரீ H.K. சுப்பிரமணியன் (டைரக்டர் Finance and Administration KHODAY Group of Industries) குமாரி ஸௌபாக்யவதி ரமாவுக்கும் (தனலக்ஷ்மி) சென்ற 4.7.86ல் விவாஹம் பங்களூர் பாலஸ்ஸில் சிறப்பாக நடந்தேறியது.

திருவீழிமிழலை ஸஹோதரர்கள் நாதஸ்வரம் ஸ்ரீ மஹாராஜபுரம் ஸந்தானம், லால்குடி. ராமபத்ரன் கச்சேரியும், மாலை வரவேற்பில் ஸங்கீத கலாநிதி ஸ்ரீமதி M.S. சுப்புலக்ஷ்மி பார்ட்டி இசை நிகழ்ச்சியும் விமர்சையாக நடந்தேறியது. மணமக்களுக்கு வாழ்த்துக்கள்.



# குமரன் பூங்காவைக் கொஞ்சம் பாருங்கள்!

முட்களுக்கு
மட்டும் அங்கு
முடிசூட்டு விழா.
விஷச் செடிகளுக்கு
விசேஷ வரவேற்பு.
மஞ்சள் பூத்த அந்த
மண்மேட்டுக்குப்
பசுமை மட்டும்
பகைமை ஆனது.

பாலைவனம் பற்றி
பாடம் நடத்தும்
ஆசிரியர்களுக்கு
ஓர் அறிவிப்பு!
உடனே
மாணவர்களை
அண்ணா
மாவட்டத்திற்கு
அனுப்புங்கள்;
குமரன் பூங்காவைக்
கொஞ்சம் பார்க்கட்டும்!

படிப்பறிவைவிட
பட்டறிவே மேலானது.

— சு.ச. நாராயண கவி
திண்டுக்கல்

***

''பேசேன்...''

''இப்ப வேணும். கூட்டம் குறைஞ்சதும் வர்றேன்...''

''சரி...''

சீனி போனதும் மனம் வெறுமையாகி விட்டது. தன்னைச் சுற்றி எத்தனை பேர் இருந்தால் என்ன? தான் தனித்து விடப்பட்டதாகவே உணர்ந்தான். திரும்பவும் அண்ணனின் ஞாபகம் வந்தது. முன்பொரு தரம் காய்ச்சல் வந்த போது அவன் கூடச் சொல்லாமல்தான் படுத்துவிட்டான். அவனது மேனேஜர் வீட்டிற்கே வந்து விசாரித்துவிட்டுப் போனார்.

இரண்டு பேரும் ஒரே வயிற்றிலிருந்து வந்திருந்தாலும் அவனுக்கு மட்டும் எப்படி எல்லாம் சௌகரியமாக அமைகிறது?

வியாபாரம் குறைந்த நேரத்தில் சீனி தானே வந்து, ''வா சந்துரு...'' என்று கூப்பிட்டான். சந்துரு கல்லாவைப் பார்த்தான். முதலாளி இருந்தார்.

இருவரும் சேர்ந்த மாதிரி இல்லாமல், தனித்தனியாக ஹோட்டலின் உள்பக்கம் வந்தார்கள்.

''சொல்லு... என்ன விஷயம்?''

தலையைக் குனிந்து கொண்டு பேசினான். ''அவ என்னை ஏமாத்திட்டா சீனி.''

''யாரு உன் ஆளுன்னு சொல்லுவியே...?''

''ம்...''

''எப்படி?''

சொன்னான்.

''அந்தப் பொண்ணு இவ்ளோ பேசினதா?'' ஆச்சரியப்பட்ட சீனி பீடி பற்ற வைத்துக் கொண்டான். ''வாழ்க்கையைப் புரிஞ்சுக்கிட்டதாத் தெரியுது.''

''சண்டாளி... கொல்லலாம்னு வருது சீனி...''

''பாதிக்கப்பட்டவன்; பேசறே... நான் என்னவோ அந்தப் பொண்ணுதான் கரெக்ட்டுன்னு நினைக்கிறேன்.''

''ம்?''

''கோவிச்சுக்காதே. லவ்வுங்கிறது பார்க்கிறதுனாலே வரக் கூடாது. புரிஞ்சுக்கிறதால வரணும். நமக்கெல்லாம் அடிப்படையே கோளாறு.''

''நான் நல்ல வேலையில இருந்தா அவ இப்படிப் பண்ண மாட்டா...''

''அந்த நிலையில நீ பண்ணியிருக்கலாம். உங்கண்ணன் இல்லையா?''

''அவன் இயல்பு வேறே!''

''தப்பு சந்துரு. வருமானப் பாதுகாப்பு அவரை எவளும் கிடைப்பாள்னு எண்ண வைக்குது. உனக்கு உள்ளதையும் இல்லாமப் பண்ணுது. எனக்கு, பண்ணியும் கஷ்டப் படுத்துது. எனக்கு, உனக்கு, உங்கண்ணனுக்கு, அவளுக்கு, அவ அப்பன் அம்மாவுக்கு... எல்லோருக்குமே ஒரே காரணம் தான் சந்துரு... வசதி மட்டத்திற்குத் தகுந்த மாதிரி அனுபவங்கள். அதுக்குத் தகுந்த அபிப்பிராயங்கள்... இங்க எல்லாமே குழப்பமா இருக்கு... அவளை மட்டும் எப்படி குத்தம் சொல்றது?''

''அப்ப காசு இருந்தாப் போதும்ங்கறே...''

அப்படி இல்லை. உத்திரவாதமான வாழ்க்கை வேணும் சந்துரு. அது கிடைச்சுட்டா மத்த காரணங்கள் குறுகிப் போய்ப் புரிந்து கொள்ளுதல் எளிமையாகும். புரிஞ்சுக்கிட்டா பிரச்னைகள் ஏது? ஏன்.....?''

இந்த ரீதியில்தான் அவன் பேசுவான் என்று தெரிந்தும் சந்துரு அவனையே பார்த்துக் கொண்டிருந்தான். நிராகரிக்க முடியாத ஏதோ ஒன்று சீனியின் பேச்சில் இருப்பதாகத் தோன்றியது அவனுக்கு.

பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

4 நான் கணவனைப் பார்த்துத் 'திடுக்கிட்ட, பூப்போட்ட புடைவை அணிந்த, அடர்த்தியான சிவப்பில் உதடு வரைந்திருந்த, கிரிக்கெட் பந்தளவில் (நோ, நோ, உங்கள் யூகம் தப்பு) கொண்டையிட்ட மாயா உடனே சுதாரித்தாள்.

''சரிண்ணா, வர்றேன், வச்சிடட்டுமா?'' என்று வைத்தாள்.

''நிதானமாக அவளை நோக்கி நடந்து வந்த நாகராஜன் அவள் தோளில் கை வைத்து, ''உங்கண்ணனா பேசினது?'' என்றார்.

''ஆமாங்க.''

''பக்கத்திலே யாருமில்லேன்னு சொன்னே. எதுக்கு?''

''போச்சு. நீங்க கேட்டுட்டீங்க. இனிமேல் சஸ்பென்சா வைக்க முடியாது.''

''என்ன சஸ்பென்ஸ்?''

''சாயங்காலம் ரிசப்ஷன்ல ஓர் ஆச்சரியமான பரிசு உங்களுக்குத் தரப் போகுதாம் அண்ணன். அது ரகசியமா இருக்கட்டும்னு சொல்லிச்சு. பக்கத்திலே யாருமில்லே. சும்மா சொல்லுன்னு சொன்னேன்.''

''வெளியில புறப்படறியா?''

''ஆமாங்க. அண்ணன் கூப்புடுது. என்னை வச்சுக்கிட்டுத்தான் அதை செலக்ட் செய்யணுமாம்.''

''அப்படி என்ன ஆச்சரியமான பரிசு?''

''சொல்ல மாட்டேங்குது.''

''நேரமாச்சே. சீக்கிரம் வந்துடுவியா மாயா?''

''ஒரு மணி நேரத்திலே வந்துடுவேன்.''

''கணேசன் எங்கே?''

''எலெக்ட்ரிசிடி பில் பணம் கட்ட அனுப்பினேன்.''

''சரி, ஜாக்கிரதையா போய்ட்டு வா'' என்று டையைக் கழற்றிக் கொண்டே, ''சாரதி, சாப்பாடு எடுத்து வை. மாயா, நீ?'' என்றார்.

''நீங்க வரலேன்னு சொன்னதாலே இப்போதான் சாப்பிட்டேன்ங்க.''

''நான் சொன்ன சிக்கல் தீர்ந்துடுச்சி. புறப்பட்டு வந்துட்டேன். நீ போய்ட்டு வா, பேசிக்கலாம். ஒரு மணி நேரம் தூங்கிட்டு நான் ரெடியாயிடறேன்.''

மாயா வெளியே வந்து கான்டசாவைத் தாண்டி அம்பாஸிடரில் ஏறி, சீறி, வாட்ச் மேனைப் பரபரப்பாய் கேட் திறக்க வைத்து, சாலையில் சறுக்கினாள்.

கோடம்பாக்கம் சாலையைக் கார் சாப்பிட்டு முடித்து, ஆர்க்காட் ரோட்டின் விலாவில் கிள்ளிவிட்டு, சாலிக்கிராமத்தைப் பின்னால் போகச் சொல்லி அதட்டி விட்டு, விருகம்பாக்கத்தில், வாசலில் ஒரு வேப்ப மரமும், அதன் நிழலில் ஒரு ஸ்கூட்டரும் நின்ற தனி வீட்டின் முன்னால் நின்று கொண்டது.

மாயா இறங்கி நடந்து அழைப்பு மணியைத் தொட, உள்ளே பிங்—பாங் என்றது. கதவு திறந்து, "வா மாயா!" என்றவனை இந்தியன் பேஸ்கட் பால் டீமில் கேள்வி கேட்காமல் சேர்த்துக் கொள்வார்கள். நிமிர்த்தி வைத்த நீள்சதுரமாய் முகம். வரையப்பட்டிருக்கிறது என்கிற சந்தேகத்தைத் தோற்றுவிக்கும் புருவங்கள். மேலுதடு மீசையின் புதருக்குள் ஒளிந்திருந்தது. கண்களில் நரித்தனம்.

கறுப்புநிற பாண்ட்டும், SUZUKI என்று எழுதிய பனியனும் அணிந்து இருந்தான் — சுகுமார். அந்தச் சின்ன ஹாலில் இருந்த மற்றொருவனைப் பார்த்து நீங்கள் ஹலோ சொல்லலாம், ஏற்கெனவே முதல் அத்தியாயத்தில் அறிமுகம் ஆகியிருக்கிறீர்கள். விமான நிலையத்தில் இருந்து அசோக்கை விடாமல் துரத்தின தாமஸ் இப்போது தன் குளிர்க் கண்ணாடியைச் சட்டையின் நுனிப் பகுதியால் துடைத்துக் கொண்டிருந்தான்.

"உக்காரு மாயா. இவர்தான் தாமஸ். இருநூறு சதவீதம் நம்பிக்கையான நபர். காரியத்திலே கொஞ்சம் ஸ்லோ மோஷன். பெங்களூர்லஒருவாரம்தங்கியும்அசோக்கை முடிக்காம தொடரும் போட்டுட்டு இங்கே வந்தும் இன்னும் ராகு காலம் பார்த்துக் கிட்டிருக்கான்" என்றான் சுகுமார்.

"சுகுமார், நான்தான் காரணத்தை விளக்கமா சொன்னேனே... ஒரு நபரைக் கொலை செய்யறது ரொம்ப்ரொம்பச் சுலபம். ஆனால் மாட்டிக்காம கொலை பண்றதுக்கு ரொம்ப நிதானம் காட்டணும்."

"கோவிச்சுக்காதேப்பா. ஆமை மாதிரி கடைசில நீ ஜெயிச்சிடுவே. எனக்குத் தெரியாதா? ஏதாச்சும் சாப்பிடறியா மாயா?"

"வேணாம் அண்ணா! கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி எனக்குப் பக்குன்னு ஆய்டுச்சி."

"ஏன், என்னாச்சு?"

"இங்கே பக்கத்திலே யாரும் இல்லேன்னு சொல்லிட்டு நிமிர்றேன். அவர் சப்தம் இல்லாம வந்து நிக்கிறார்."

"அப்புறம்?"

"நான் சாமர்த்தியமா சமாளிச்சிட்டேன். ஒரு ரகசியப் பரிசு உங்களுக்குத் தர்றதுக்காக அதை செலக்ட் பண்றதுக்காக என்னை அண்ணன் கூப்புடுச்சின்னு சொல்லிட்டு வந்துட்டேன்."

"கிழவனுக்குச் சந்தேகம் எதுவும் இல்லையே?"




"இல்லே. ஐம்பத்திரண்டு வயசு, கிழ வயசா?"

"பாருய்யா தாமஸ், தங்கச்சிக்குப்புருஷன் மேல பாசம் ஃபவுண்ட்டன் மாதிரி சிதறுது!" என்று சிரித்த சுகுமார் உடனே சிரிப்பு வடிந்து, "மாயா, தாலிக் கயிறு, கல்யாணம் கணவன் அது, இதுன்னு சென்டிமெண்ட்சைப் போட்டுக் குழப்பிக்கக் கூடாது நீ. நோக்கத்திலே உறுதியா இருக்கணும். புரிஞ்சுதா?" என்றான்.

"ஒரு வார்த்தைக்குச் சொன்னேன் சுகுமார்."

"வார்த்தைக்குக் கூட நாகராஜனை சப்போர்ட் பண்ணிப் பேசாதே. உன்னோட பங்களாவுக்குஉள்ளே போனதும்பிரமாதமா நடி. வெளியே வந்ததும் பழைய மாயாவா ஆய்டு."

"சரி, இப்போ ஏற்பாட்டைத் தெளிவா சொல்லிடு."

"தாமஸை நல்லா பார்த்துக்கோ மாயா. இப்பப் போட்டிருக்கிற இதே சட்டை, பேண்ட்லதான் சாயங்காலம் ரிசப்ஷனுக்கு இவன் வருவான். உன் பார்வையிலே படற மாதிரி இருப்பான். நீ நோட் பண்ணிக்கணும். சரியான சந்தர்ப்பத்தில உன்னைப் பார்த்துக்கிட்டே கர்சீப் எடுத்து உதட்டைத் துடைச்சுக்குவான். அதான் உனக்கு சிக்னல். நீ தயாராயிடணும். அடுத்த செகண்ட் தாமஸ் நாகராஜனைச் சுடுவான். தாமஸோட குறி வைக்கிற திறமையை நீ பார்த்ததில்லையே... தாமஸ்!" என்று சுகுமார் நடந்து மேஜையின் டிராயரைத் திறந்து ஸைலன்ஸர் பொருத்தப்பட்ட கையடக்கப் பிஸ்டலை எடுத்து அவனை நோக்கி எறிந்தான்.



காட்ச் செய்த தாமஸ், ''எதைச் சுட ணும்?'' என்றான்.

''இந்தக் கவரின் விட்டத்திலே நகருது பாரு பல்லி!''

அந்தப் பல்லி சரசர என்று நகர்ந்து கொண்டிருக்க... தாமஸ் அதன் வேகத்திற்குக் குறியை நகர்த்திக் கொண்டே வந்து... விஸ்க்!

'சொத்'தென்று கீழே விழுந்தது பல்லி.

''பார்த்தியா மாயா. இதே மாதிரி பாது காப்பான, சுட்டுட்டுத் தப்பிப் போக வாகான தூரத்திலிருந்து சுடுவான். இதான் நாம பேசின ஏற்பாடு. இப்போ இதிலே ஒரு சின்ன திருத்தம் இருக்கு.''

''என்ன?''

''தாமஸ் சுடறப்போ நீ நாகராஜனைக் கீழே தள்ளிவிட்டு, குண்டு பாயாமக் காப் பாத்திட்டு, அதோ அவனைப் பிடிங்கன்னு கத்தறே!''

''என்ன சுகுமார் இது, பைத்தியக்காரத் தனமா இருக்கு. நாகராஜனைக் கொல்றது தானே நம்ம நோக்கம். காப்பாத்தச் சொல் றியே?'' என்றாள் மாயா.

''இரு. பொறுமையா கேளு. ரிஸப்ஷன்ல அத்தனை பேர் முன்னிலையிலே நீ உன் புரு ஷனைத் துணிச்சலாக் காப்பாத்தறப்போ நமக்கு ரெண்டு ப்ளஸ் பாய்ண்ட்ஸ் கிடைக் குது. ஒண்ணு — நாகராஜனை கொலை செய்ய நினைக்கிற அளவுக்கு அவனுக்கு யாரோ எதிரி இருக்கான்னு எல்லாரையும் நம்ப வைக் கிறோம். ரெண்டு — புருஷனைக் காப்பாத்தின புண்ணியவதின்னு நீ படம் போட்ட தங்க. மாய்டறே. நம்ம ரெண்டாவது முயற்சில உன்னை யாரும் சந்தேகப் படவே முடி யாது.''

''ரொம்ப பிரமாதமான ஐடியாண்ணு. இது. ஆனால் இதிலே ரெண்டு ரிஸ்க் இருக்கே. நான் சரியா தள்ளி விடாம இருந்து எசகுபிசகா அவர் மேலேயே குண்டு பாய்ஞ் சிட்டா? அடுத்து... தாமஸ் அந்தக் கூட்டத் திலே மாட்டிக்கிட்டா?''

''ரெண்டுமே நடக்காது மாயா. தாமஸ் நாகராஜன் மேல குண்டு பாயற மாதிரி சுடப் போறதே இல்லே. கொஞ்சம் தள்ளித்தான் சுடுவான். நீ தள்ளி விடாமலேயே இருந்தா லும் நாகராஜன் மேலே குண்டு படாது. நீ தள்ளி விடற நாடகம் எதுக்குன்னு உன் மேல அவருக்கு நம்பிக்கை வளரும். அப்புறம்... தாமஸ் இருக்கானே, அவன் நிடப்பொருளே இல்லே! வாயு! உடனே காத்திலே கலந்துடு வான் தெரியுமா? தாமஸை உனக்குத் தெரியாது. கில்லாடி அவன்! மாட்டிக்கு வான்ங்கிற கவலையே வேணாம்.''

''சரி, அப்ப நான் புறப்படட்டுமா? நான் சொன்னது உண்மையா இருக்கணும். அதுக் காக ஏதாச்சும் ஒரு வித்தியாசமான பரிசை எடுத்துக்கிட்டு வாண்ணே ரிசப்ஷனுக்கு.''

''சரி.''

''ஸிஸ்டர், ஒரு நிமிஷம் இருங்க. நீங்க இருக்கிறப்பவே இன்னொரு விஷயமும் பேசி முடிவு பண்ணிவிடலாம்'' என்றான் தாமஸ்.

''என்ன பேசணும்?''

''உங்களோட மிகப் பெரியத் திட்டத் துக்குச் செயல் வடிவம் கொடுக்க நான் முழு மூச்சா பயன்படுத்தப்படறேன். திட்டத் தோட வெற்றிக்கப்புறம் எனக்குக் கிடைக்கப் போறது என்னன்னு தெரிஞ்சா, இன்னும் உற்சாகமா ஒத்துழைக்கலாம் பாருங்க.''

மாயா தன் அண்ணனைப் பார்த்தாள்.

சுகுமார் தாமஸை நெருங்கி, ''என் முகத் தைப் பார்த்துச் சொல்லு தாமஸ். எட்டு வருஷமா பழகறோம் நாம். என் மேல நம் பிக்கை இல்லையா உனக்கு?'' என்றான்.

''செய்யறதே நம்பிக்கை மோசடி. அதே வித்தை நாளைக்கு என் பக்கமும் திரும்பலாம் இல்லையா?''

''சேச்சே! தாமஸ், நாம குறி வச்சிருக்கிற சொத்துக்களோட மதிப்புத் தெரிஞ்சா நீ இப்படிப் பேச மாட்டே. கடல்ப்பா அது. அள்ள, அள்ளக் குறையாது. உனக்கு ஒரு பெரிய ஷேர் நிச்சயம் உண்டு.''

''இந்த மேம்போக்கான பதில் வேணும் சுகுமார்.''

''வேறே என்ன சொல்லச் சொல்றே?''

''பெங்களூர்லே இருக்கிற பங்களாவைப்



"என்னடாது! கம்ப்யூட்டர் படத்துக்கு பூஜை நடத்திக்கிட்டிருக்கே?"

"கம்ப்யூட்டர் புண்ணியத்திலேதான் நல்லா படிக்காத நான் பாஸ் பண்ணியிருக்கேனாக்கும்!

பார்த்தேன். அற்புதமா இருக்கு. அதை மட்டும் எனக்குச் சொந்தமாக்கிட்டாப் போதும்."

"அவ்வளவுதானே? டன்!" என்றான் சுகுமார்.

**பா**ண்ட்டுக்குள் சட்டையை நுழைத்தான் அசோக். அறைக் கதவைத் தள்ளி ரூம் பாய் காப்பி கொண்டு வந்து வைத்து விட்டுப் போனான். பெல்ட்டை நேற்று அணிந்த பாண்ட்டில் இருந்து உருவி லூப்களில் நுழைத்தான்.

டெலிபோனை எடுத்து, "கனெக்ட் மீ ஃபோர், த்ரீ, ஒன், ட்ரிபிள் சிக்ஸ் ப்ளீஸ்" என்று காத்திருக்கையில் செண்ட் பீய்ச்சிக் கொண்டு வாசனையாக, "ஹலோ, மிஸ்டர் பத்மநாபன் சாரா பேசறது, குட் மார்னிங் சார், என் குரல் தெரிகிறதா?" என்றான்.

"நாகராஜன் பையன்தானே?"

"கரெக்ட். நீங்க என்ன சிவில் லாயரா, கிரிமினல் லாயரா சார்? கண்டுபிடிச்சிட்டீங்களே, சரியா!"

"ஏன், சிவில் லாயருக்குப் புத்தி கம்மியா?"

"நான் சும்மா ஜோக்குக்குச் சொன்னேன். உங்களைச் சந்திக்கணும் சார், நான்."

"எதிர்பார்த்தேன். ஏன்ப்பா இப்படியா புத்திகெட்டத் தனமா நடந்துக்குவாங்க?"

"என்ன நடந்துக்கிட்டேன் அப்படி?"

"அப்பாவைப் பகைச்சுக்கிட்டியே... உன்னை அடியோட வெறுக்கிற அளவுக்குச் செஞ்சிருக்கியே..."

"என் கருத்தைச் சொல்றது தப்பா? அவருக்குத்தான் சார் வரக் கூடாத வயசிலே வரக்கூடாத ஆசையெல்லாம் வருது. அம்மா செத்து ஆறு மாசம் கூட ஆகலே. இப்போ கல்யாணம் பண்ணியிருக்காரே. நியாயமா?"

"உனக்குப் பக்குவம் பத்தலேப்பா. இரண்டாம் கல்யாணம் பண்ணிக்கிறது நாட்ல புதுசா என்ன? இது அவங்கவங்க பர்சனல் விருப்பம். இப்பப் பாரு. நீ அப்பா மேல கேஸ் போடறதுக்கு வக்கீலைத் தேடறே."

"கேஸ் போடறதுக்கா? இல்லே சார். அதுக்கெல்லாம் என்ன அவசியம்? நான் வர்றேன். நேர்ல வர்றேன். விவரமா சொல்றேன். இப்ப வரட்டுமா?"

"வாயேன்."

வைத்த போது அறைக் கதவு தட்டப் பட்டது.

"கமின்."

பிரேமா உள்ளே வந்து, "குட் மார்னிங்" என்றாள். புடைவையின் தலைப்பு ஜன்னல் காற்றில் ஊஞ்சல் விளையாடிக் கொண்டிருந்தது.

"ஏய்! ஆபீஸ் போகலே?"

"போனேன். கையெழுத்துப் போட்டேன். மெஷின்ல ஆஸ்க்னு அடிக்கிறதுக்குப் பதில் அசோக்னு டைப் அடிச்சேன். கிழிச்சுப் போட்டுட்டு லீவு எழுதிட்டுப் புறப்பட்டு வந்துட்டேன். தொந்தரவா அசோக்?"

"சேச்சே. என்ன தொந்தரவு? உக்காரு. என்ன நாற்காலியில உட்கார்றே? என் மடி எதுக்கு இருக்கு?" என்று நெருங்கி அவளை இடுப்போடு அணைத்து அப்படியே ஒரு சுற்றுச் சுற்றி நிறுத்தினான்.

"இவ்வளவு வேகத்தை உள்ளே வச்சுக்கிட்டுப் பதினைஞ்சு நாள் யாரைப் பத்தியும் கவலை இல்லேன்னு பெங்களூர் போனீங்களே, திமிர்தானே?"

"போனாலும் ரெண்டு நாளைக்கொருதரம் போன்ல பேசினேனா இல்லையா? பிரேமா, கதிரை வரச் சொல்லியிருக்கேன். வந்ததும் எங்க குடும்ப வக்கீல் பத்மநாபனைப் பார்த்துப் பேசணும். என்னோட லீகல் ரைட்ஸ் என்னன்னு தெரிஞ்சுக்கணும். அதுக்கப்புறம்தான் எங்கப்பாகிட்டே பேசப் போறேன். நான் வந்திருக்கிறதே அவருக்குத் தெரியாது."

"அப்போ இன்னிக்குச் சாயங்காலம் ரிசப்ஷனுக்கு...?"

"நான் போகப் போறதில்லே."

கதவு தட்டப்பட்டு, "நான்தான் அசோக்" என்று கதிரின் குரல் கேட்டது.

அடுத்த ஐந்தாவது நிமிடம் மூவரும் ஒரு டாக்ஸியில் பயணம் செய்து கொண்டிருந்தார்கள்.

**வ**க்கீல் பத்மநாபன் நடுவகிடெடுத்து, பளபளவென்று எண்ணெய் தேய்த்துச் சீவியிருந்தார். பேச்சுக்கு நடுவில் தொந்தியில் தாளம் போட்டார். அறிமுகங்கள் முடிந்த பிறகு...

"சுருக்கமாச் சொல்லுங்க சார். எங்க தாத்தாவோட சொத்தின் ஆதாரத்திலே அதைப் பிரம்மாண்டமாக்கியவர் எங்கப்பா. இப்போ என்னோட லீகல் ரைட்ஸ் என்ன?" என்றான் அசோக்.

"ஜீரோ" என்றார் பத்மநாபன். "அப்பாவியா இருக்கியேப்பா. எப்படி உனக்குச் சொல்றது? அசோக், உங்கப்பா தன்னோட இரண்டாவது மனைவிக்குச் சொத்து முழுக்க உயில் எழுதி ரெஜிஸ்ட்டர் பண்ணியிருக்கார், போன வாரத்திலே."

"வாட்?" என்று எழுந்து விட்டான் அசோக்.

(தொடரும்)

இன்று சம்பள நாள்.

என் மனத்தில் வழக்கமாய் இந்த நாளில் இருக்க வேண்டிய வளப்பத்திற்குப் பதில் குழப்பம்.

அதற்குக் காரணமிருக்கிறது...

திருமணத்திற்குப் பிறகு நான் வாங்கும் முதல் சம்பளமிது — பிடித்தமெல்லாம் போக அறுநூற்றைம்பது. சொச்சம்.

வழக்கமாய் அம்மாவிடம் ஐந்நூறு ரூபாயைக் கொடுத்துவிட்டு மீதியைச் சொந்தச் செலவுக்கு வைத்துக் கொள்ளும் நல்ல பிள்ளை (!) நான்.

இப்போதும் அப்படிச் செய்தால் புது மனைவி கோபிப்பாளோ? திருமணத்திற்குப் பின் வந்த இரவுகளை என் கடந்த கால ஏக்கங்களுக்காகவே செலவிட்டுவிட்ட நான் மனைவியின் மனத்தை இன்னும் எடைபோட வில்லை!

'பெண்டாட்டி வந்தபின் பிள்ளையின் மனம் மாறிவிட்டதோ!' என்ற நினைவு அம்மாவுக்கும் வந்துவிடக் கூடாது. அப்பா அவசரப்பட்டுத் தன் ஆயுளை முடித்துக் கொண்ட நாளில்,குடும்பப் பொறுப்புகளைத் தன் தலைமேல் ஏற்றிக் கொண்டு என்னை ஆளாக்கிவிட்ட தெய்வமவள். அந்த நல்ல மனம் நோகும்படி நடந்து கொண்டால் எனக்கு ஐந்தறிவு என்று அர்த்தம்!

அம்மாவின் மனமும்நோகாமல்,சுமதியின் மனமும் கோணாமல் இன்று நான் நடந்து கொள்ள வேண்டும். எப்படி?

அலுவலக வேலை நேரம் முடிந்து மணி ஆறுக்கு மேலாகியும் நான் கிளம்பாமல் வீட்டில் அமர்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தேன்:

தராசுத் தட்டுக்கள் இரண்டு என் மனத்தில் மாறி மாறி ஊசலாடின. ஒன்றில் சுமதி, மற்றொன்றில் அம்மா!

இலங்கைத் தமிழர் பிரச்சனையை விட இது எனக்குப் பெரிதாகத் தெரிந்தது.

அண்ணாந்து உச்சியில் சுழன்ற 'உஷா'வை வெறித்தேன். சிறு மூளை என்னென்னவோ யோசனை சொல்லித் தோற்றது!

திடீரென்று அது சொன்ன ஒரு யோசனை அதிகம் பிடித்துப் போகவே அலுவலகத்தை விட்டுப் புறப்பட்டேன் — 'அப்படிச் செய்வதுதான் சரி!'

செல்லும் வழியில் ஸ்வீட் பாக்கெட்டும் மல்லிகைப் பந்தும் பத்து ரூபாய் செலவில் என் கைக்கு வந்தன.

வீட்டில் நுழைந்தபோது ஹாலின் நடுவே ஊஞ்சலில் அமர்ந்திருந்த அம்மா 'கீதை' படிப்பதுபோல் நடித்தாள். அவளுக்குத் தெரியும் — நான் சம்பளப் பணத்தோடு வருவேன் என்று. அப்புறம் அர்ச்சுனன் எக்கேடு கெட்டால் என்ன?

அடுக்களையிலிருந்து ஓடிவந்த சுமதி, ''ஏங்க, இன்னிக்கு லேட்டு?'' என்று தோரணையாகக் கேட்டாள்.

நான் அவளுக்குப் பதில் சொல்லவில்லை. அம்மாவிடம் மல்லிகைப் பந்தையும் அல்வாவையும் நீட்டினேன். ''அம்மா, இந்தப் பூவை உன் கையால் சுமதிக்கு வச்சுவிடு!'' என்றேன். சின்னப் புன்னகையோடு பெற்றுக் கொண்டவள்சுமதியின்கூந்தலில்மல்லிகைச் சுமையேற்றினாள்.

சுமதியிடம் சம்பளக் கவரை நீட்டினேன். ''சுமதி, நம்ம கல்யாணத்துக்கு அப்புறம் நான், வாங்குகிற முதல் சம்பளம் இது... இதை உன் கையால் அம்மாகிட்டே கொடு... ரெண்டு பேரும் அம்மா காலில் விழுந்து ஆசீர்வாதம் வாங்கிக்குவோம்!'' என்றேன்.

மலராய்ச் சிரித்த சுமதி நான் சொன்னதை மகிழ்வோடுசெயலாக்கினாள். நாங்கள் இருவரும் காலில் விழுந்து எழுந்த போது, ''பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழணும்!'' என்று அம்மா வாழ்த்தினாள்.

என் மனத்தை ஆக்கிரமித்திருந்த குழப்பம் 'குட்பை' சொல்லிப் போனது!

— பட்டுக்கோட்டை ராஜா





## ஆயிரம் பூக்கள் மலரட்டும்

ஊருக்குப் புதுசாய் ஒரு டாக்டர் வருகிறார். கிரிக்கெட் விளையாடி ஜன்னல் கண்ணாடியை உடைக்கும் பெண்ணைக் காதலிக்கிறார். ஒரு தலைக்காதல்!

தினமும்டாக்டருக்குச்சாப்பாடுகொண்டு வரும் பெண் அவரைக் காதலிக்கிறாள். இன்னொரு ஒரு தலைக்காதல்!

அப்புறம்?

தாம் காதலிக்கும் பெண்ணைக் கடைசி கடைசியாய் நெருங்கி, 'அந்தப் பாட்டை இன்னொரு தடவை பாடு' என்று விரும்பிக் கேட்கிறார். அப்பொழுதுதான் தெரிகிறது அந்தப் பெண் பேச்சை இழந்து ஊமையாகி விட்டவள் என்று. அதுவரை அந்த விஷயத்தை நமக்கும் சஸ்பென்ஸாய் வைத்திருப்பதைப் பாராட்டலாம்.

டாக்டர் பாடுபட்டு அந்தப் பெண்ணுக்கு மறுபடியும் பேச்சை வரவழைத்தவுடன், முதல் ஷாக். அவள் வேறொருத்தனைக் காதலிப்பதைத் தெரிவிக்கிறாள். அந்தக் காதலனையே தேடி அவளுக்கு மணம் செய்யத் தீர்மானம்செய்தபின்தான், இரண்டாவது மூன்றாவது 'ஷாக்'கள். க்ளைமாக்ஸ்.

இரண்டுமே-ஒரு தலைக்காதல் என்பதால் டூயட்கள் எல்லாமே கனவுக் காட்சிகள். ஊமைப் பெண்ணாய் சீதா. சின்னக் குழந்தைகளோடு சின்னப் பெண்ணாய் அழகாய்ப் பொருந்துகிறார்.

சாப்பாடு எடுத்து வரும் பெண்ணாய் ரஞ்சனி. அழகாய்ச் சிரிக்கிறார். அழகாய் வெட்கப்படுகிறார். வெகு அழகாய்த் துடுக்—வெடுக் என்று பேசுகிறார். டாக்டர் வேறு பெண்ணைக் காதலிப்பது தெரிந்து, மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டு, வேறொருத்தனைக் கல்யாணம் செய்து கொள்கிறார்.

'என்னய்யா, கதையைச் சொல்லிக்கிட்டே போகிறே?' என்று கேட்பவர்களுக்கு, சொல்லுவதற்கு வேறெதுவும் இல்லியே சாமி.

நரசிம்மன் இசையில் பாடல்கள் ஓகே. (சில ட்யூன்கள் வடக்கிலிருந்து இறக்குமதி போல் தோன்றினாலும்!)

தினேஷ்பாபுவின் காமிராவுக்குக் கொண்டாட்டம். புதிதாய் டைரக்ஷனுக்கு வந்திருக்கும் ராம்தாஸ் புதுசுபுதுசாய்ச் சம்பவங்களைத் தேடியிருக்கலாமே என்று சொல்லாமல் இருக்க முடியவில்லை.

தெலுங்கிலிருந்து டப்பிங் என்றதும் சந்தேகம். 'சுய்யா முய்யா' என்று குதிக்கும் நாலு டூயட். ஜீப் துரத்தல்கள். ஜெயமாலினியின் சகல குலுக்கல்கள். அம்மாவைக் கொன்றவனை டிஷ்யூம், டிஷ்யூம் — இதுதானே என்று போனால் செமை ஸர்ப்ரைஸ்! நறுக்கென்று முகத்தில் ஐஸ் தண்ணீரைத் தெளித்தது போல் ஒரு சிலிர்ப்பு.

கதை ஒரு ரௌடியைப்பற்றியது. ஊரையே அச்சுறுத்தி அடிபணிய வைத்த காளி எனும் தலைமை ரௌடி. அவன் ஆட்களோடு மோதியதால் ஒரு கான்ஸ்டபிளின் மனைவி கடத்தப்



## பூ ஒன்று புயலானது

படுகிறாள். அந்தக் கான்ஸ்டபிள் பதறிக் கொண்டு ஸ்டேஷனுக்கு ஓடிவந்தால்... 'காளியா கடத்திட்டுப் போயிட்டான்? வீட்டுக்குப் போய்யா. நாளைக்கு உன் மனைவி தானே திரும்பி வருவா...' கணவன் கண் முன்னாலேயே மனைவியைக் களங்கப்படுத்த முயன்று, அவள் உயிர் துறந்து... ஹப்பா, எத்தனை சோகம்! கான்ஸ்டபிள் ஆத்திரம் தாளாமல் இன்ஸ்பெக்டரையும், போலீஸ் டிபார்ட்மெண்ட்டையும் தோலுரித்துக் காட்டும் இடம், பச்சை மிளகாயைக் கடித்தது போல் காரம். இன்னும், மாமூல் கொடுக்காத மீனவனை அடித்து நொறுக்கி அவன் உயிர் பிரியுமுன்னரே அவன் மனைவியின் தாலியைப் பறித்து, குங்குமத்தை அழித்து... கொடூரம்!

குடிசை ஏழைகளை கட்டாய அப்புறப்படுத்துதலில் ஒருவன் படுகாயமடைந்து போலீஸில் வாக்குமூலம் கொடுக்க, நேர்மையான சப்—இன்ஸ்பெக்டர் காளியைக் கைதுசெய்து லாக்கப்பில் போடுகிறார். பலன்? கேஸ் வாபஸ் பெறப்பட்டு, எஸ். ஐ. நடுரோடில் ஆயிரம்பேர் முன்னிலையில் படுகொலை செய்யப்படுகிறார். ஊரே அவன் கொடூரங்களுக்குப் பயந்து மௌனமாய்த் திரும்பிக்கொள்ள, ஒரே ஒரு பெண் பதறுகிறாள். போலீஸ் மேலதிகாரியிடம் புகார் கொடுக்கிறாள். மேலதிகாரி எவ்வளவோ தயங்கி விட்டுக் கடைசியில் காளியிடமே அந்தப் புகார் காகிதத்தைக் கொடுத்துவிட, காளி அந்தப் பெண்ணின் வீடு தேடி வருகிறான்.

நடுத்தெருவில் அவளை இழுத்துப்போட்டு, உடைகளை ஒவ்வொன்றாய்... அவள் வீட்

டார் முன்னிலையிலேயே உருவி... தாலி கட்டிய கணவனை கையாலாகாமல் பதறிக் கொண்டு செயலிழந்து நிற்க... படம் பார்ப்பவர்களின் ரத்த அழுத்தம் உச்சத்திற்குப் போகிற இது மாதிரியான ஏராளக் காட்சிகள், ஒவ்வொன்றிலும் உயிர்த் துடிப்பிருக்கிறது.

கல்லூரி மாணவர்களது பக்குவம் வராத பதற்ற நிலை, சமூக அவலங்களைச் சாட யாருக்கும் தைரியமின்மை, தேர்தல் பூத்தில் அடியாட்களோடு நுழைந்து கள்ள ஓட்டு போட்டு ஜெயிக்கும் அரசியல்வாதிகள், தேர்ந்தெடுக்கப்படாமலேயே சகலத்தையும் கட்டுப்படுத்தும் ரௌடிகளின் இணையான அரசாங்கம் என்று எத்தனை அப்பட்டமாய் சமகால அநியாயங்கள் வெளிச்சத்திற்கு வருகின்றன!

கடைசி வரை நிமிர்த்தி உட்கார வைக்கும் திரைக்கதை, டைரக்ஷன் (கிருஷ்ணா). சொரேர் என்று சாட்டை நுனியால் தீண்டும் வசனங்கள். 'நிர்வாணமாக்கிட்டா, உங்க அம்மாவும், அக்காவும் கூட இப்படித்தான்டா இருப்பாங்க.' 'காந்தி காலத்தில ஒரே ஒரு கொடியவன் தான் இருந்தான். இன்னிக்கு வீட்டுக்கொரு கொடியவன் இருக்கானே அய்யா.' ஆரூர்தாஸ். (சொந்தமா, மொழி பெயர்ப்பா?) கையைக் கொடுங்கள், மோதிரம் போட வேண்டும்.

விஜயசாந்தி தான் ஜான்வி எனும் ஹீரோயின். அமைதியான அழுத்தம். குறைகளே இல்லையா? உண்டு. சின்னச் சின்னதாய். ஆனால் இவ்வளவு அற்புதமாய்ப் படமெடுத்திருக்கும் போது, குறை சொல்ல மனசு வரவில்லை.



## வசந்த ராகம்

புதுமை செய்ய வேண்டும் என்ற ஆசை யாருக்கும் வரும். நியாயம்தான். ஆசை மட்டும் போதுமா?

தாலி கட்டிய புருஷன் இறந்து விட்டானென்று நம்பி விதவையானவள். அவளை மணந்தே தீருவது என்று அடம் பிடிக்கும் அவள் நாட்டியத்தின் ரசிகன். கல்யாணம் முடிந்தபின் மறுபடியும் வந்து தலையை நீட்டும் பழைய புருஷன்!

சுவாரஸ்யமாயில்லே, கேட்பதற்கு? கேட்க மட்டுமே.

இரண்டாவது கல்யாணத்தில் எனக்கு இஷ்டமில்லே என்று தீர்மானமாய் மறுதலிக்கும் நாயகியைக் காட்டிவிட்டு, இரண்டாவது காட்சியில் அந்த இரண்டாவது கல்யாணம் நடந்தேறி விட்டது என்று சொல்கிறார்கள். அந்தப் பெண்ணை யார் கன்வின்ஸ் செய்தார்கள்? எப்படி? நம்மை கன்வின்ஸ் பண்ணத் தவறுகிறார், டைரக்டர்.

அதுதான் போகட்டும். சமுத்திரத்தில் போராட்டம். கணவன், மனைவி பிரிந்து விடுகிறார்கள். மனைவியைத் தேடி ஊர் ஊராய்ப் பாடும்(!) பாடகன் மனைவியை ஆடியன்ஸில் கடைசியில் கண்டு விடும்போது என்ன செய்வான்? அட, ஓடிப் போய்க் கட்டிக் கொள்ள வேண்டாம். இரண்டொரு வார்த்தை கூடவா பேசக் கூடாது? பாட்டு முடிந்த பிறகுதான் அந்த எண்ணமே வருமாம். இரண்டாவது கல்யாணம் செய்து கொண்டவன் பரம ரசிகன். தங்கமானவன். படுக்கையறையில் கூட வெகு டீஸண்ட்டாக மனைவியின் மனமாறுதலுக்காகக் காத்திருக்கத் தயாரானவன். அவனிடம் கடத்தல் சமாசாரம் போல விஷயத்தை மறைத்து மறைத்து...

பின் எப்படித்தான் படத்தைத் தள்ளிக் கொண்டு போவது என்கிறீர்களா?

விஜய்காந்த் ஊருக்குப் போகிறேன், ஊருக்குப் போகிறேன் என்று நாலு காட்சிக்கொரு தரம் பெட்டியைத் தயார் செய்வது வேடிக்கையாயிருக்கிறது.

க்ளைமாக்ஸ் காட்சி அபத்தம். கணவனின் அந்த முடிவுக்கு அப்புறம், இன்னொருத்தனோடு பெண்டாட்டியால் சந்தோஷமாக வாழ்க்கை நடத்த முடியுமா என்ன? அந்த தியாகம் சூன்யமாகி விடவில்லை?

ஆஸ்பத்திரியில், வியாதியஸ்தர்கள் எழுந்து நாட்டியத்தில் பங்கு கொள்ளும் அந்த குரூப் டான்ஸ் நல்ல கற்பனை.

எம்.எஸ்.வி.யின் அரை டஜன் பாடல்களில் இரண்டு: மகா இனிமை.

ரகுமான், சுதாசந்திரன், விஜயகுமாரி என்று திறமைசாலிகளுக்குக் குறைச்சலில்லை.

துப்பாக்கியும், கத்தியும் வைத்துப் பழிவாங்கும் படம் எடுத்துப் பிரபலமான சந்திரசேகர், துர்ப்பாக்கியமான ஒரு பெண்ணின் கதையை எடுத்த போது மட்டும் நம்மைப் பழிவாங்கி விட்டார்!

— ஜெயமன்மதன்

# ''அரசாங்கம் உதவினால் கூட உதவாக்கரை தானா?''



* மெய்யம்பட்டி கிர

மெய்யம்பட்டி. நத்தம் பக்கத்திலுள்ள சிறு கிராமம். முழுக்க ஹரிஜனங்கள் வசிக்கின்ற ஊர். இரண்டு வருஷங்களுக்கு முன்பு குடிசைகளாக இருந்த ஊரில் இப்போது ஓட்டு வீடுகள்; ஒரு சிறு பள்ளிக்கூடம்; அடி குழாய்; அவர்களுக்கிடையிலேயே ஒரு சங்கம். மெய்யம்பட்டிக்காரர்களிடம் போய், ''என்னங்க?'' என்று கேட்டால் ஒரு பாங்க் காரரைக் கை காண்பிப்பார்கள்.

கை காண்பித்த பாஸ்கரனைப் பார்த்தோம். கனரா வங்கிக் காரர். பாங்கில் சம்பளம் வாங்கினாலும், இவருக்கு வேலை கிராமங்களில். நான்கு கிராமங்கள் இவர் வசம். ஊர்ப் பிரச்னைகளுக்காக அலைகிறார். 'கிராம சேவகத் தொண்டர்' என்கிறார் தன்னைப் பற்றி.

''இரண்டு வருஷங்களாகத்தான் எங்கள் பேங்கில் இப்படியொரு திட்டம். தமிழ்நாட்டில் நான்கு இடங்க்ளலே சமூக சேவை செய்வதற்கென்றே — இப்படி நபர்களை நியமித்திருக்கின்றோம்'' என்கிறார் பாங்க் மானேஜரான சபாபதி.



* சபாபதி



* பாஸ்கரன்.

''இதனால் உங்களுக்கு என்ன லாபம், சார்?''

''லாபம்னு ஒண்ணுமில்லை. பேங்கிற்கும் கிராமங்களுக்கும் இடையிலே ஓர் இடைவெளி இருக்கு. இதற்கு பேங்க் பற்றித் தெரியப்படுத்தினா மட்டும் போதாது. கிராம ஜனங்களோட சேர்ந்து, அவங்க பிரச்னைகளோட சேர்ந்து ''ஒர்க்'' பண்ணினா பேங்க் பற்றி நெருக்கமாத் தெரிஞ்சுக்க சான்ஸ் இருக்கு. இல்லையா?''

''எப்படி 'ஒர்க்' பண்றீங்க?''

''வாங்க சார்... நேரடியாகவே போய்ட்டு வந்துடலாம்.''

கிராம சேவகத் தொண்டர் பாஸ்கரன் உட்படக் கிளம்பினோம். மெய்யம்பட்டிக்கருகில் வளையும் போது ஒரு போர்டு. ''கனரா வங்கி சமூக சேவை செய்யும் கிராமம்'' என்று.

''இது மாதிரி இன்னும் நான்கு கிராமங்களிலே சேவை செய்யறோம்'' என்றார் பாஸ்கரன்.

கிராமத்திற்குள் நுழைந்து விட்டோம். ஒரு சிறு கூட்டம், சுற்றிலும். கிராமத்துத் தலைவரான பெரிய அய்யாவை விசாரிக்கிறோம்.

''எருமை மாடு, பசு மாடு வாங்கிக் கொடுத்திருக்காங்க... குடிசைகள் போட்டுக் கொடுத்திருக்காங்க...'' என்கிறார்.

வரிசையாக இருபது ஓட்டு வீடுகள்.

''இதெல்லாம் தேசிய ஊரக வேலை வாய்ப்புத் திட்டத்திலே கட்டின வீடுங்க. கட்டும் முன்பே பிரச்னை. வீடுகளை கட்டத் தொகை கிடைச்சும், கட்ட ஆட்கள் கிடைக்கலை. கடைசியிலே ஜனங்களேதான் வீடுகளைக் கட்டிக்

கிட்டாங்க...'' என்கி
வீடுகளுக்குள் போ
ஜன்னல்களுக்குக் க
இற்றுப் போய் ஒடிந்
ஒரு வருஷம் கூட ஆ
வீட்டைப் பற்றி பய
''அரசாங்கம்ஒதுக்
இருங்க... அதை வை
என்கிறார்கள் புலம்ப
இருந்தும் — அரசாங்
நம்பகரமாய் இருக்கி
அரசாங்கம் பள்
சர்வ சேவா சங்கம்
பட்டு ஒரு பள்ளியை
களே உணவும் போ
லாம் இடையாது.

*பெரியய்யா





கிறது. இருநூறு மாடுகளுக்குமேல் வாங்கப் பட்டிருக்கிறது. "நிலம் இருக்கிறவங்க கிட்டே கூலிக்குப் போய்க்கிட்டிருந்தோம். இப்பமாடுவைச்சிருக்கிறதுனாலே பால் மூலம் மாசம் முந்நூறு ரூபாய்க்கு மேலே கிடைக்குது'' என்கிறார்கள். கேட்க நன்றாகத் தானிருக்கிறது.

''இப்படியே இரண்டு மூன்று வருஷங்களுக்கு ஒரு கிராமத்தைக் கவனிச்சுட்டுப் பிறகு வேறு கிராமங்களுக்குச் சேவை பண்ணலாமென்

ஸ்கரன்.
ர்க்கிறோம். சமதளமில்லாத தரை.
ல்லை. வீட்டுக் கூரைச் சட்டங்கள்
ம் நிலையிலிருக்கின்றன. குடிபோய்
ம். அதற்குள் மழை பெய்தால் கூட
கிறார்கள்.
டுத்ததிலேஇதுமாதிரிதான்கொடுக்
ங்க... நாங்க வீடு கட்ட முடியும்!''
றயாக. ஒரு பேங்க் பின்னணியில்
சய்கிற பணிகள்தான் எவ்வளவு

டம் கட்டித் தர முன் வராததால்
ஓர் அமைப்புத்தான் பரிதாபப்
த்துக் கொடுத்திருக்கிறது. அவர்
கள். அரசாங்கச் சத்துணவெல்



* பள்ளிக்கூடம்

''ஆறு மாசத்துக்கொரு தடவை இங்கே அரசாங்க அதிகாரிகள், பேங்க் காரர்கள், கிராம ஜனங்கள் அனைவரும் கலந்துக்குற மாதிரி 'மீட்டிங்' போடுறோம்,'' என்கிறார் மானேஜர். சிலருக்கு உதவியாக டெய்லரிங் சென்டர். நாற்பது பேருக்குமேல், நிலப்பட்டாக்கள். இப்படிச் சில வசதிகளோடு, இளைஞர் சங்கங்கள் வேறு அமைக்கப்பட்டிருக்கின்றன. கூடவே முதியோர் கல்வியும் சொல்லித் தரப்படுகிறது.

''ஏறத்தாழ ஆதிவாசிங்க குடியிருப்பு மாதிரி இருந்தோம்ங்க. இன்னைக்கு இந்த அளவுக்கு முன்னேறினதுக்கு பேங்க் காரங்க முக்கிய காரணம்ங்க'' என்கிறார் கிராம இளைஞரான மலைச்சாமி.

நான்கு சதவிகித வட்டியோடு ஐந்து லட்சம் ரூபாய் வரை இந்தக் கிராமத்திற்குக் கடன் வழங்கப்பட்டிருக்

நிருக்கிறோம்... இதனாலே கிராமத்துக்காரங்க பல பேரு பேங்குக்கு வர்றாங்களே... சேமிப்பின் அருமையைத் தெரிஞ்சுக்கிட்டு முடிஞ்சதைச் சேமிக்கவும் செய்யறாங்களே... அது ஒண்ணுதான் சார் இதுலே லாபம்'' என்கிறார் பாஸ்கரன்.

நல்லதுதான். இவ்வளவு தூரம் ஒரு பேங்க் அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறபோது, அரசாங்கம் உதவுவதைக் கூட உருப்படியாக செய்யக் கூடாதா? எப்படியோ —பேங்க் காரர்களுக்கு ஒரு 'கங்கிராட்ஸ்' சொல்லத் தான் வேண்டும்.

— ஆகி.

சருக்கம் — 20

## காலத்தின் கட்டாயம்

'உலா' பாடுவதற்கு ஒட்டக்கூத்தருக்கு நிகர் ஒட்டக்கூத்தர்தான். உலா மட்டுமல்லாது தமிழில் உலாவரும் அனைத்தையும் பாட வல்லார். ஆயினும் செருக்கின் செம்மாப்பு.

கம்பீரம் இருப்பதால் சிங்கம் கர்ஜிக்கிறது. மின்னல் கொடி போன்ற கற்பனை, இடி முழக்கம் செய்துதானே தீரும்?

மிடுக்கு நடை போட்டு — மாளிகையினுள் நுழைகிறார் ஒட்டக்கூத்தர்.

வாசலில் சுஜாதை, நான் வந்துவிட்டேன் என்பது போல் எழுந்து நிற்கிறாள்; சிரிக்கிறாள்.

சந்தனத் திருமேனியில் வந்தனைக்குரிய வார்ப்பட அழகியவள்.

ஒருகணம் நின்று கவனிக்கிறார்.

'மாரவேள் கண்சிவப்ப வாய் சிவப்பாள்' என்று அவர் விக்கிரமசோழன் உலாவில் எழுதிய வரியை ஞாபகப்படுத்திப் பார்க்கிறார்.

''சுஜாதை! மாடக் கூடத்தில் அமருவதை விட்டு இப்படி நடைகூடத்தில் அமர்ந்து என்னை நாணப்படுத்துகிறாயா? இல்லை உன்னை நாணப்படுத்திக் கொள்ளுகிறாயா?''

அன்பாலும் உரிமையாலும் கண்டிக்கிறார்; ஆனால் அங்கே கோபம் கொப்புளிக்கிறது. 'ஏதோ சிந்தனைத்தடம் புரண்டிருக்கிறது; நாம் கவனமாக இருக்க வேண்டும்' என்று கருதிய சுஜாதை, ''எங்கே அமர்ந்தாலும் அது உங்களுக்குரிய இடம்தானே சுவாமி?'' என்று அவள் சிரித்த சிரிப்பு...

மின்னலைப் பிளந்து அதனுள் கன்னலை மின்னலாக்கிய பொன் சிலிர்ப்பு புறப்பட்டது போலிருந்தது.

ஒட்டக்கூத்தர்மாடப்படியேற,ஒண்டொடியாள் நாடிப் பின் தொடர்ந்தாள்.

கூத்தர் பிரான் அறையினுள் நுழைந்து அலங்காரத்தைக் கலைக்கவில்லை. அகங்காரமிருப்பவர்க்கன்றோ அலங்காரப் பெருமை தெரியும்?

அவர் கறுப்பு முத்தாம் பவானியை எதிர் பார்க்கிறாரே...!

சாளரத்து வழியாகக் கவனிக்கிறார்.

சுஜாதை மிகத் தொலைவில், மாடத்து நிலா முற்றத்தில் அமர்ந்திருந்த அழகு, நிலாவே பகற்போதில் தமது முற்றத்தில் அமர்ந்திருப்பது போலிருந்தது.

ஒருபணியாளன் வந்து பணிந்து நின்றான்.

''அமைச்சர் பவானி வந்துவிட்டாளா?''

''இல்லை பெருமானே! அரண்மனைச் சமையற்காரன் வந்து இருக்கிறான்.''

''சமையற்காரனா? அவன் ஏன் இங்கு வந்தான்?''

''தங்களை அவசியம் பார்க்க வேண்டுமாம்.''

''அனுப்பி வை!''

ஒட்டக்கூத்தருக்கு மேலும் எரிச்சலோ எரிச்சல். இன்று நெருப்பு முகத்தில் விழித்தோமா என்ன?

சமையற்காரன் வந்து காலில் நெடுஞ்சாண்கிடையாக விழுகிறான்.

''ஐயனே! நான் பிள்ளைகுட்டிக்காரன்! என்னைக் காப்பாற்றுங்கள்!''

''என்னடா நடந்தது?''

''இன்று சற்று அஜாக்கிரதையாகச் சமைத்து விட்டேன். வீட்டில் மனைவியுடன் ஏற்பட்ட எரிச்சல். எரிச்சல் எனக்கு ஏற்படக்கூடாது. காரணம் நெருப்பு முகத்தில் தினமும் விழிப்பவன். ஏற்படலாமா? ஏற்பட்டுவிட்டது. அதனால் சமையலில் சற்றுக் கவனக்குறைவு. உணவில் கல்லும் மண்ணும் இருந்து விட்டன. எந்தக் கோபத்தோடு மாமன்னர் பெருமான் வந்து அமர்ந்து உண்டாரோ... கல்லும் மண்ணும் இருக்கக் கண்டு வேலையை விட்டு நீக்கிவிட்டார். தாங்கள் தாம் பெரிய மனம் வைக்க வேண்டும்.''

இருக்கும் எரிச்சலில் இது வேறா?

''ஒன்று செய்! என் வீட்டுச் சமையற்காரனை அரண்மனைக்கு அனுப்பிவிடுகிறேன்; நீ இங்கு அமர்ந்து கொள். கல்லையும் மண்ணையும் ஜீரணிக்க வல்லவன் ஒட்டக் கூத்தன்!''

''வேண்டாம் ஐயா! நீண்ட காலமாக அரண்மனையில் பணிபுரிகிறேன். அதில் எனக்குக் களங்கம் வரக்கூடாது.''

அவனது அரச பக்தி, கூத்தரை நெகிழச் செய்து விட்டது.

''அப்படியா! உனது அரச விசுவாசத்துக்காக உன்னைக் காக்கிறேன்'' என்று கூறியவர், ஓலை நறுக்கை எடுத்து எழுத்தாணியில் * பொத்தினார்.

---

* பொத்தி எழுதியதால் பொத்தகம் என்றும் பின்னால் புத்தகம் என்றும் மருவியது.

மாண்புமிகு

# முதலமைச்சர்

கோவி. மணிசேகரன்



மீனகம் பற்றிய வேலையு
  மண்ணையும் வெற்படங்கப்
போனகம் பற்றிய மாலலை
  யோ பொருந் தாவரசர்
கானகம் பற்றக் கனவரை
  பற்றக் கலங்கல் பற்ற
வானகம் பற்ற வடிவேல்
  விடுத்த மன துங்கனே !

''இதனை எடுத்துச் சென்று மன்னனிடம் கொடு! மன்னிப்பான்!''

*சமையற்காரன் மீண்டும் சாஷ்டாங்கமாக விழுந்து பணிந்து ஓலை நறுக்கைப் பெற்றுச் சென்றான்.

கோபமிருக்கும் இடத்தில் குணமிருக்கும் என்பதற்குக் கூத்தர் சான்றாய் விளங்குகிறார் என்றும் அவன் போற்றிக் கொண்டான்.

உறுமும் புலி போல உலவுகிறார்.

சுஜாதை வேறு காத்துக் கொண்டிருக்கிறாள்.

எப்போதும் அவளை இவ்வாறு காக்க வைத்தது இடையாது.

''உள்ளே வரலாமா?''

பெண்ணின் குரல்.

''யார் பவானியா?''

''ஆம். ஐயனே!''

''சம்மதம் என்று சொன்ன கறுப்பு சண்பகப் பூவா? உள்ளே வரலாம்.''

பவானி உள்ளே நுழைந்து வணங்குகிறாள்.

''இப்படி அமரலாம்.''

''தமிழ் உலாவ நான் அமரலாமா?''

''நான் உலா எழுதுகிறவன். உலாவவும் செய்வேன்; போகட்டும், மருத்துவர் என்ன சொன்னார்?''

''இன்னும் ஆபத்தான கட்டத்திலிருந்து முதலமைச்சர் நீங்கவில்லையாம். மருத்துவம் காப்பதைவிட மகேசன்தான் காக்க வேண்டுமென்கிறார்!''

''காக்கட்டும்! நீ உட்கார்!''

''பரவாயில்லை! என்னை வரச் சொன்ன தன் காரணம் மருத்துவர் செய்தி என்பது கண் துடைப்பு; வேறு ஏதோ முகத்துடைப்பு இருக்கிறது என்று நினைக்கிறேன் புலவர் பெருமானே?''

பவானியின் கூர்ந்த அறிவை எடை போடுகிறார்.

''புத்திசாலிப் பெண்!''

''இல்லையென்றால் முதலமைச்சர் என்னை அமைச்சராக்கி இருக்க மாட்டார்!''

''முதலமைச்சர் யாரைத்தான் பதவியில் அமர்த்தவில்லை? யாரைத்தான் பதவியை விட்டு நீக்கவில்லை? எல்லாம் வேண்டியவர்; வேண்டாதவரைப் பொறுத்திருக்கிறது.

* தமிழ் நாவலர் சரிதை.

அருள்வாக்கு



"பரிப்ரச்நம்" என்பதாகக் கேள்வி கேட்டுக் கேட்டுக் கற்றுக் கொள்வதில் ஒரு விசேஷம் இருக்கிறது. உபநிஷத்தில் இப்படித் தான் கேள்வி கேட்டுக் கேட்டு ஸமாசாரங்களைக் கறந்து கொள்வதாகப் பல இடங்களில் வருகிறது. கீதையில் அர்ஜுனன் குறுக்கே குறுக்கே எத்தனை 'கொஸ்ச்சின்' பண்ணுகிறான்? சிஷ்யன் கவனமாக குரு உபதேசத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறான் என்பதற்கு இந்தக் குறுக்குக் கேள்வி பெரிய ஸாக்ஷி.

'லெக்சர்' என்று முழுக்க 'ப்ரிபேர்' பண்ணிக் கொண்டு போய் அதை ஒப்பித்து விட்டு வந்து விடலாம் என்று ஒரு ப்ரொபஸர் இருக்கிற வரையில் அவர் ஸப்ஜெக்டை ஸாங்கோபாங்கமாகப் பார்க்க வேண்டிய கட்டாயமில்லை. தம்முடைய அபூர்ண ஞானத்தைக் கொண்டே எல்லாம் தெரிந்த மாதிரி லெக்சர் கட்டி ஏமாற்றிவிட முடியும். பரிப்ரச்நம் என்று நடுநடுவே தோண்டித் தோண்டிக் கேள்வி கேட்குமாறு மாணவனை விடும்போதுதான் லெக்சரரும் ஸப்ஜெக்டைப் பூர்ணமாகப் பார்த்துப் புரிந்து கொள்ள வேண்டியதாகும். அவர் 'மிஸ்' பண்ணிவிட்ட விஷயம் ஏதாவது இருந்தால் அது சிஷ்யனின் பரிப்ரச்நத்தில் வெளிப்பட்டு விடும். அவர் அதற்கு மேலே அதற்கான புத்தகங்களைப் பார்க்க இடமேற்படும்.

குரு — சிஷ்யான் இரண்டு பேருமே விஷயங்களை நன்றாகத் தெரிந்து கொள்ள "பரிப்ரச்நம்" பெரிய தூண்டுகோல். வாத்தியார் ஸ்டூடண்டைக் கேட்கிறாற் போலவே இவனும் அவரைக் கேட்கணும். இதிலேதான் புதுசு, புதுசாக இன்டரெஸ்டிங்காக விஷயங்கள் வரும். ஜே. கிருஷ்ணமூர்த்தி இப்படித்தான் கேள்வி கேட்டுப் பதில் சொல்கிற ஸெஷன்ஸ் நடத்துகிறார். ஸ்வாரஸ்யமாயிருக்கிறது என்கிறார்கள். நாங்களும் பாஷ்ய பாடம், வாக்யார்த்தம் என்று நடத்தும் போது கேட்கிறவர்கள் புத்திசாலித்தனமாகக் கேள்வி கேட்கிற போதுதான் ரஸம் கூடுகிறது. 'அடடா! இது நமக்குத் தெரியலையே! — இப்படி நமக்குத் தோணலியே! இதுக்குப் பதில் தெரிஞ்சுக்கணும்' என்ற ஆர்வம் பிறக்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

இல்லையென்றால் அவருக்கென்றே உருகிச் சாகும் ஜோதியைப் பதவியில் அமர்த்தி இருக்கலாமே!"

"நான் விரும்பியது போல ஜோதியும் விரும்ப வேண்டும் அல்லவா?"

"விரும்புவது என்பது எல்லோருக்கும் கைவரக் கூடிய கலையல்ல! நீ கூட நான் சேக்கிழார் வீட்டை விட்டுப் புறப்படுகிற போது வருகிறாயா என்றதற்கு 'ஆகட்டும்' என்று கூறாமல், 'சம்மதம்' என்று சொன்ன வார்த்தையில் இருந்த கனம் என்னை எப்படியெல்லாம் நினைக்கச் செய்துவிட்டது தெரியுமா?"

"நான் சம்மதித்தது தமிழ் என்ற கனமான ஆணைக்கு! பலவீனமான மானுடத்துக்கு அல்ல!"

ஒட்டக்கூத்தர் ஒருவாறு விழித்துக் கொள்கிறார்.

பவானியின் பேச்சில் அடங்காப் புயல் தெரிகிறது. இந்த அமைச்சர் பதவிக்காக நான் எல்லோருக்கும் மரியாதை தந்துவிட முடியாது என்று கூறுவது போலப் புலனாகிறது. உங்கள் பலவீனத்தை என்னிடம் காட்ட வேண்டாம் என்று சுட்டிக் காட்டுவது புரிகிறது. இவளை மட்டம் தட்டிப் பார்த்து விட வேண்டியதுதான். அதற்குமுன் தெரிய வேண்டிய செய்தியை அறிய முயல வேண்டும்.

"பவானி! சேக்கிழார் தயாரிப்பு என்றாலே அதில் ஒரு புரட்சி திமிரல் தெரிகிறது!"

"முதலமைச்சர் ஒரு சத்திய வேள்வி! அதில் தேவ பிரசன்னங்கள்தாம் இருக்க முடியும்!"

"நான் மறுத்தேனா?"

"நீங்கள் அவரை இப்படி விமர்சித்து இருக்கக் கூடாது."

"நான் பொதுவான அரசியல் பேசினேன். நான் உட்காருகிறேன். நீயும் உட்கார்ந்து பேசலாம்."

கவிராட்சஸர் அமர, பெண்மை ராட்சஸியும் உடன் அமர்ந்தாள்.

"நான் உன்னை ஒரு விஷயம் பற்றிக் கேட்பேன். அரச நலனுக்காகக் கேட்கிறேன். அமைச்சர் என்பதால் கேட்கிறேன். ஜோதி யாரையாவது காதலிக்கிறாளா?"

பவானி மருண்டாள்.

"நல்ல வேளை; நீ யாரையாவது காதலிக்கிறாயா என்று என்னைக் கேட்காமல் விட்டீர்களே!"

"பின்னால் அதையும் கேட்கத்தானிருக்கிறேன்!"

"ஐயய்யோ!"

"இதற்குள் பயந்து விட்டால்? சொல்! சோழமாமன்னன் ஜோதியைக் காதலிப்பது மாதிரி தெரிகிறது."

"எனக்குத் தெரிந்து அப்படி இருப்பதாகத் தெரியவில்லை."

"ஜோதி சேக்கிழாரைக் காதலிக்கிறாளா?"

"பக்தி செலுத்துகிறாள்; அந்த மட்டில் தெரியும்! நானும் கூடத்தான் முதலமைச்சர்

பால் பக்தி செலுத்துகிறேன்! காதலிப்பதாக அர்த்தமா?"

"அப்படியென்றால் நீ யாரையாவது காதலிக்கிறாயா?"

"காதலிப்பது உண்மை; பொய் சொல்லவில்லை; ஆனால் உங்களையல்ல!"

"யாரை?"

"இது என் சொந்த விஷயம்!"

"ஜோதி கபாலீச்சுரன் என்ற அசிங்கமான உருவத்தைக் காதலன் என்று சொல்லிக் கொள்கிற மாதிரி, நீயும் காளாமுகன் என்கிற ஓர் அசிங்கத்தைக் காதலிக்கிறாயோ என்று கேட்டேன்!"

"இப்படியான கேள்விகள் உங்களுக்குத் தேவைதானா கவிராட்சஸரே? வாணிதாசர் அலசுகிற விஷயமா?"

"தமிழில் நான் வாணிதாசன்; கவிச் சக்கரவர்த்தி! ஆனால் அரசியலில் சோழ மன்னனின் ஆசான்! எனவே இது அவசியமாகிறது."

"காதல், அரசியலுக்குக் காவத தூரம்! காதலிப்பது என்பது அவரவரின் தனிப்பட்ட சொந்த விவகாரம். இதில் புலனாய்வு என்பது பலரைப் புண்படுத்துவதாகும்."

"புலனாய்வு என்பதே புண்படுத்துவது தானே?"

"இதனை நீங்கள் சம்பந்தப்பட்டவர்களைக் கேட்க வேண்டும். அப்போதும் கூட சோழச் சக்கரவர்த்தி வேண்டுமானால் இது சம்பந்தமாக மறுமொழி கூறக் கடமைப்பட்டிருக்கலாம். நீங்கள் அவைக் குரவர்; ஆசான்! நானோ, ஜோதியோ முதலமைச்சருக்கு மட்டுமே கடமைப்பட்டிருக்கிறோம். நான் வேண்டுமானால் சோழச் சக்கரவர்த்திக்குக் கடமைப்படலாம். காரணம் அமைச்சர்."

"அது என்ன வேண்டுமானால்?"

"இந்தப் பதவி எனக்கு வேண்டுமானால்! தேவையில்லையென்றால்?"

பவானியிடம் ஓர் அமைச்சருக்குரிய கம்பீரமிருக்கக் கண்டு வியந்து போனார் ஒட்டக்கூத்தர்.

பவானி எழுந்து கொண்டாள்.

"பௌர்ணமி நிலவு வெகுநேரமாகக் காத்திருக்கிறது. அமாவாசையிடம் அதிக நேரம் வீணாக்குவானேன்? நீங்கள் என்னை அமாவாசை என்றதால் ஒன்றைச் சொல்வேன். பௌர்ணமியைக் காட்டிலும் அமாவாசை விசேஷமான நாள்! புண்ணிய நாள்!"

"பலே!" என்று கூறிய வண்ணம் அங்கு வந்து நின்றான் கபாலீச்சுரன்!

"நீ எங்கு இங்கு வந்தாய்?"

"ஏதோ என்னிடமும் தனியாகப் பேச வேண்டும் என்றீர்கள். பவானியைப் பின்தொடர்ந்து நானும் வந்தேன்!"

"உன்னைக் காவலர்கள் எப்படி அனுமதித்தார்கள்?"

கைவிரலிலிருந்த அரசலாஞ்சனையைக் காட்டுகிறான் கபாலீச்சுரன்.

வியர்த்து வெலவெலத்துப் போனார் ஒட்டக்கூத்தர்.

"இது எப்படி உன்னிடம் வந்தது?"

"சோழமாமன்னர் கொடுத்தார்!"



"எழுத்தாளர் ஏகாம்பரத்தை எனக்குப் பள்ளிப் பருவத்திலேயிருந்து நல்லாத் தெரியும்!"

"அப்படியா.....?"

"ஆமாம், அவர் அப்பவேயிருந்தே காப்பியடிப்பார்!"

— கடுவை கோபால்சாமி

"உன்னிடமா? ஏன்?"

"ஜோதியைக் காதலிப்பதற்காக அளித்த பரிசு! ஜோதிக்குத் தீங்கு வந்துவிடக் கூடாது என்பதற்காகக் கவசம்!"

"ஜோதி உன்னைக் காதலிக்கிறாளா? அப்படி ஒரு நாடகமா? சேக்கிழாரை அவள் காதலிக்கிறாள் என்பது உனக்குத் தெரியுமா? இதுகுறித்துப் பேசத்தான் அழைத்தேன்."

"இந்த நாடகத்தை யார் எழுதியது?"

"வதந்தி!"

"வதந்திக்கு நாடகம் எழுதத் தெரியலாம்; காட்சி பிரிக்கத் தெரியாது. வேண்டுமானால் நீங்கள் எழுதித் தரலாம்!"

"கபாலீச்சுரா! யாரிடம் பேசுகிறாய்?"

"எனது ஆசானிடம்!" என்று கூறிய கபாலீச்சுரன், தலை வரையிலான தனது மாறுவேடத்தைக் கலைத்துக் காட்ட, "குலோத்துங்கா!" என்று ஒட்டக்கூத்தர் அலற, "உஸ்! வெளியில் பௌர்ணமி இருக்கிறது!" என்றான் சோழமாமன்னன் குலோத்துங்கன்.

பவானி வெடவெடத்துப் போய்த் தொலைவில் நிற்கிறாள்.

"ஆசிரியப் பெருமானே! வீணில் சேக்கிழார் மீது களங்கத்தை விதைக்க வேண்டாம். ஜோதியின் காதலன் நான்தான்! வீணில் தென்றலை அறுவடை செய்வதாக எண்ணிப் புயலை அறுவடை செய்து விட வேண்டாம்."

"குலோத்துங்கா! நீயா? காதலிக்கலாமா?"

"காதலித்தால் என்ன? வயது இல்லையா? ஆனாலும் இது ஒரு காலத்தின் கட்டாயம். எவருக்கும் தெரியாமல் இருப்பது நல்லது!"

"பவானி?"

"அவள் நெல்லை அறுவடை செய்பவள்; சாவியாக்க மாட்டாள்!"

கரம் கூப்பிச் சிரம் தாழ்ந்தாள் கறுப்பு முத்து பவானி.

(தொடரும்)

இரவே விஷயம் ஊருக்குள் பரவி விட, விடிந்ததும் ஒவ்வொருவராய் வரத் தொடங்குகிறார்கள்.

இவன் வெளித் திண்ணையிலிருந்த மரத் தூணில் முதுகைச் சாய்த்து உட்கார்ந்திருக்கிறான்.

உள்ளே...

கூடத்தில் வெள்ளைத் துணியால் போர்த்தி... நீளக் கிடத்தப்பட்டிருக்கிறது, இவன் தந்தையின் உடல்...

வலப்பக்கமும் இடப்பக்கமும் இவன் அம்மாவும் மூன்று தங்கைகளும். அவர்களைச் சூழ்ந்து ஊர்ப் பெண்களும் அமர்ந்திருக்க, அவர்களின் பிலாக்கணம் துக்கம் விசாரிக்க, வருவோர் கூடத்தில் நுழைகையில் உச்ச ஸ்தாயிக்குச் செல்வதும் பிறகு மெல்லக் குறைவதுமாக இருக்கிறது. அதிலும் இவன் அம்மாவின் குரல் ஒவ்வொரு முறை ஒலிக்கையிலும்...

''ஏ... ராசா... எங்களை இப்படி அனாதையாத் தவிக்க விட்டுட்டுப் போய்ட்டியே ராசா... நடுச்சாமத்துலே மாரை வலிக்குதுன்னு தண்ணி கேட்டே, கொடுத்தேன்... பையனை எழுப்புன்னு சொன்னே... எழுப்பிட்டு வர்றதுக்குள்ளே நீ போய்ட்டியே ராசா... என்ன சொல்ல நெனைச்சியோ, ஏது சொல்ல நெனைச்சியோ, சொல்லாமல் போய்ட்டியே ராசா...''

— இவனுக்குத் தாங்க முடியாத வேதனை நெஞ்சை அழுத்த, விழிகளில் நீர் வழிய உட்கார்ந்திருக்கிறான்...

''ஏப்பா தம்பி! சின்னவருக்குத் தந்தி குடுத்தாச்சா...?''

துக்கம் விசாரிக்க வந்த ஒருவர் இவன் தோளைத் தொட்டுக் கேட்கிறார். சாராய நெடி குடலைப் புரட்டுகிறது.

இவன் பேசவில்லை.

''அப்பனைப் பறிகொடுத்த துக்கத்துல தம்பி ஒக்காந்திருக்குது... அதுங்கிட்ட போய்க் கேட்டா என்னத்தைச் சொல்லும்! என்னதான் இருந்தாலும் சின்னவருக்குத் தந்தி குடுக்காமலா இருப்பாங்க. அதெல்லாம் குடுத்திருப்பாங்க. அவரு வந்துதானே காரியம் ஆகணும். நீ வா... வா...

— கூட வந்தவர் அவரை இழுத்துக் கொண்டு போகிறார்.

அவர்கள் சின்னவர் என்று குறிப்பிட்டது இவன் சித்தப்பாவை. உள்ளே கிடத்தியிருக்கும் இவன் தந்தையின் சொந்தத் தம்பியை!

அவர்கள் அப்படிக் கேட்டதில் காரணம் இல்லாமல் இல்லை.

இவனுக்கு இன்னும் அது நன்றாக ஞாபகம் இருக்கிறது.



# சொல்லாமல் போன அப்பா

எஸ்.அண்ணாதுரை





அப்போது இவனுக்கிருந்தால் எட்டு அல்லது ஒன்பது வயதிருக்கலாம். கல்யாணம் இல்லாதிருந்த சித்தப்பா வேலை வெட்டி ஏதுமின்றி, ஊரைச் சுற்றிக் கொண்டு இவன் வீட்டில்தான் தங்கி இருந்தார். அவருக்கும் சேரியில் இருந்த அல்லிக்கும் தொடர்பு இருப்பதாக ஊரில் பேசிக் கொண்டார்கள். அல்லி 'ஒரு மாதிரி!' விஷயம் மெல்ல மெல்லப் பரவி, இவன் தந்தைக்கு எட்டியபோது, அவரைக் கூப்பிட்டுக் கண்டித்தார். ஆனால் அதற்குப் பிறகும் அல்லியுடன் அவர் தொடர்பு நீடித்தது.

ஒருமுறை, இவனே நேரில் ஒருநாள் பார்த்து விட்டு வந்து தந்தையிடம் சொல்லிவிட, வீட்டிற்கு வந்ததும் வராததுமாய் அவரை பெல்ட்டால் விளாசித் தள்ளிவிட்டார் இவன் தந்தை. அவ்வளவுதான், அன்றிரவே அல்லியை இழுத்துக் கொண்டு, வீட்டிலிருந்த பணத்தையும் எடுத்துக் கொண்டு ஊரை விட்டே ஓடிப் போக, இவன் தந்தைக்கு ஊரில் தலைநிமிர்ந்து நடக்க முடியாத நிலை. அவமானப்பட்டுப் போனார்.

வெகு • நாட்களுக்குப் பிறகு, தான் பட்டணத்தில் இருப்பதாகவும் அல்லியைத் திருமணம் செய்து கொண்டு, ஏதோ வியாபாரம் செய்து வருவதாகவும் அவரிடமிருந்து கடிதம் வந்தது. இவன் தந்தை பதில் எழுதவில்லை. அதோடு சரி! அதற்குப் பிறகு அவர் தொடர்பு தொடரவில்லை; உறவும் நீடிக்கவில்லை.

ஆனால் அதையெல்லாம் இப்போது மனத்தில் வைத்துக் கொள்ளாமல் அவருக்குத் தந்தி கொடுத்துவிட்டு, 'வருவாரா... மாட்டாரா...' என்று அரைகுறை நம்பிக்கையோடு, எல்லோருடன் இவனும் அவரை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான்.

நேரம் ஓடிக் கொண்டிருக்கிறது...

ஒவ்வொருவராய் வந்துசேர, கூடத்தினுள் அழுகை ஒலி கூட, அழுது அழுது இவன் அம்மாவுக்குக் குரல் கம்மிப் போய் இருக்கிறது. அந்தக் குரலிலும் விடாமல் திரும்பத் திரும்ப ஒரே பிலாக்கணம்...

"மகனைக் கூப்பிடுன்னு சொன்னியே ராசா... எழுப்பிக்கூட்டிட்டு வர்றதுக்குள்ளே எங்களை விட்டுட்டுப் போய்ட்டியே ராசா... இப்ப உன்னைச் சுத்தி எல்லோரும் இருக்கிறோம். நீசொல்லநினைச்சதைஇப்பவாயைத் தொறந்து சொல்லு ராசா! சொல்லு! சொல்லு! சொல்லு...!"

— படார்... படார் என்று மார்பில் அறைந்து கொண்டு அழுத அம்மா மயங்கி விழ...

இவன் துடித்துப் பேய்க் கூடத்திற்குள் பிரவேசிக்கையில்... மயக்கத்தைத் தெளிவிக்க முகத்தில் நீரை வீசி அடித்து, விசிறியால் விசிறிக் கொண்டிருக்கிறார்கள்...

இவன் நின்றவாறே தன் தாயைப் பார்க்கிறான்...

## எழுதியது யார்?

### ஆறுதல் பரிசுகள்:

வஞ்ச் டைம் நாடகத் தொடரை எழுதிய ஆறு எழுத்தாளர்களை வரிசைப்படுத்தும் போட்டியில் நான்கு பெயர்களைச் சரியாக எழுதி ஆறுதல் பரிசாகத் தலா ரூபாய் ஐந்து பெறுவோர்:

காந்திமதி, ஹைதராபாத்–7; வி. ரங்கசுவாமி, அம்பனேரி; எச். அஸ்ஸுன்னிசா, ஆம்பூர்; எஸ். சாரதா, புலியூர்; ஏ. டபால்ட் நோபல், கருமத்தூர்; ஆர். சுந்தரி, தூத்துக்குடி; ஏ.வி. டேவிட், மேட்டூர் அணை–1; நா. இராஜேஸ்வரி, சென்னை–34; எல்.கே. விஜய், சென்னை–4; வி. சீதாலக்ஷ்மி, பெங்களூர்–3; செ. அரவிந்தன், நெய்வேலி–1; கே.எஸ். லலிதாம்பாள், ஆலப்புழை; ஆர். பாஸ்கர கிருஷ்ணமூர்த்தி, சேலம்–5; தனலக்ஷ்மி, பெங்களூர்; பாலா அசோக், திருச்சி–1; ஆர். என். கிஷோர் ஆனந்த், பெங்களூர்–16; பி. மீனாட்சி, நெகமம்; என். சாந்தா, கோயமுத்தூர்; வேல் விஸ்வகுமார், சென்னை–33; கு. ராமமூர்த்தி, இராய வேலூர்; வே. மீனா, திருச்செந்தூர்; அன்பு மதியழகன், கொப்பம்பட்டி; சி. ஆர். நாகராஜன், வளவனூர்.

மூன்று பெயர்களைச் சரியாக எழுதி ஆறுதல் பரிசாகத் தலா ரூபாய் 3.50 பெறுவோர்:

ஆர். ஹரிஹரன், திருவனந்தபுரம்; சு. அ. ராணி, உதயநத்தம்; எஸ். பாண்டியன், பாண்டிச்சேரி; ஆர். நடராஜன், நெய்வேலி–2; குமாரி ஹரிணி, குவாலியர்; கே. வி. கிருஷ்ணையர், தஞ்சாவூர்–4; பெ. மணிமேகலை, திருச்சி–1; பி. ஜெயலக்ஷ்மி, மதுரை; கே. மங்களம், நெல்லிக்குப்பம்; எஸ். ஜனார்த்தனம், புது டெல்லி–5; டி. உஷா ராணி, மதுரை–20; கே. ஜெயம், பம்பாய்–62; ஜி. சாந்தி, சேந்தமங்கலம்; பி.கே. சந்திரசேகரன், சென்னை–45; வி.எஸ். நாராயணன், ஆலமங்கலம்; இ.சு. பால சுப்பிரமணியன், ஜெயங்கொண்டம்.

"நர்ஸ் என்ன ஆபரேஷன் தியேட்டர்ல இருந்த கத்திகளையெல்லாம் காணலே..."

"சாரி சார்.... பேஷண்ட் எல்லாம் தற்காப்புக்காக எடுத்து வைச்சிருக்காங்க."

— கே.ஏ.பி. பாரதி



புரிந்தும் புரியாமல், சுற்றி நின்று அழும் மனிதர்களை வேடிக்கை பார்ப்பதும், பின் தாங்களும் அழுவதுமாக இருந்த தங்கைகளைப் பார்க்கிறான்.

நீளக் கிடத்தியிருக்கும் தந்தையின் முகத்தைப் பார்க்கிறான்.

பார்க்கப் பார்க்க, அடக்க முடியாமல் அழுகை பொங்கி வர, தாங்க மாட்டாதவனாய் வெளித் திண்ணைக்கு வந்து அமர்ந்து கொள்கிறான்...

சிறிது நேரத்திற்கெல்லாம் வாசலில் ஒரு பரபரப்பு...

"சின்னவர் வந்துட்டாரு! சின்னவர் வந்துட்டாரு..." — ஆளுக்கு ஆள் முணுமுணுக்கிறார்கள்.

இவன் தனக்குள் ஓர் எதிர்பார்ப்போடு பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் பார்த்த சித்தப்பாவின் உருவத்தை மனத்தில் 'என்லார்ஜ்' செய்து கொண்டு இப்போது வரும் சித்தப்பாவை எதிர்நோக்க... நிறையவே வேறுபாடுகள் தெரிகின்றன.

முந்தைக்கு இப்போது பருத்திருக்கிறார். கழுத்தில் சதை மடிப்பு; காதோரம் லேசாய் நரை; தும்பைப் பூவாய் உடை; தடித்த பிரேமில் மூக்குக் கண்ணாடி!

கையில் ரோஜா மாலையோடு கம்பீரமாய் அவர் நடந்து வருகையில் சிலர் கும்பிடுகிறார்கள்.

அவர் நேராய்க் கூடத்துள் நுழைந்து, ரோஜா மாலையைச் சடலத்துக்குச் சாத்துகையில், அழுகை ஒலி ஓங்கி ஒலிக்கிறது.

சில நிமிடங்கள் கைகளைக் கட்டி, சடலத்தையே பார்த்துக் கொண்டிருந்தவர், மூக்குக் கண்ணாடியைக் கழற்றிக் கண்களைத் துடைத்துக் கொண்டு திண்ணைக்கு வந்து இவன் தோளைத் தொட... அந்த நிமிடமே இவன் உடைந்து போய் அழுகிறான்.

ஆதரவாய்த் தோளைத் தட்டிக் கொடுத்து விட்டு வாசலுக்கு வந்தவர், "என்ன பண்ணியிருக்கீங்க...?" என்று ஊர்ப் பெரியவரைக் கேட்கிறார்.

"ஒண்ணும் பண்ணலீங்க... நீங்க வரட்டும்னுதான் இருந்தோம். தம்பியும் அதைத்தான் சொல்லிச்சு..."

"நான் வந்து சொல்லித்தான் எல்லாம் செய்யணுமா என்ன? வழக்கப்படி செய்ய வேண்டியதுதானே? நல்ல பெரிய மனுஷங்கய்யா நீங்க..."

— அவர்களைக் கடிந்து கொண்டவர்,

"மளமளன்னு ஆக வேண்டியதைப் பாருங்க. குழி வெட்டணும், பூந்தேர் கட்டணும்... வந்திருக்கறவங்களுக்குப் பசிக்கு ஏதாவது குடுத்தாகணும்! சீக்கிரம் ஏற்பாடு பண்ணுங்க..."

— சட்டைப் பையிலிருந்து சலவைத் தாள்களாகச் சில ஐம்பது ரூபாய்களை எடுத்து நீட்டவும் ஆளுக்கொரு பக்கமாய்ப் பறக்கிறார்கள்.

**வா**சலில் பூந்தேர் தயாராகிக் கொண்டிருக்கிறது...

பச்சை மூங்கிலை வளைத்தும், பின்னியும் பூக்களைச் சுற்றிவிட்டும் தேர் அமைத்துக் கொண்டிருந்த இருவர், சற்றே தங்கள் வேலையை நிறுத்திவிட்டு, ஆளுக்கொரு பீடியைப் பற்ற வைத்துக் கொள்கிறார்கள்...

"பெரியவருக்கு நல்ல சாவுப்பா. நோவு நொடியில்லாம திடுதிப்னு போய்ட்டார். ஆனா பசங்க புள்ளைங்களுக்கு ஒரு தேவை பண்ணிப் பார்க்காம போய்ட்டாரேன்னு நெனைக்கறப்பத்தான் வருத்தமா இருக்கு. அப்படித்தானாகட்டும் இந்தப் பையனுக்கு ஒரு வேலை வெட்டி கெடைச்சிருந்தாக் கூடப் பரவாயில்ல. பையனுந்தான் பாவம், படிச்சு முடிச்சிட்டு அங்கே இங்கேன்னு எழுதிப் போட்டுட்டு அலையா அலையறான். வேலை கிடைச்சாத்தானே! ம்ம்... எப்படித்தான் இனி சீவனம் பண்ணப் போறாங்களோ..."

— பீடியை உறிஞ்சிப் புகையை ஊதியவாறு ஒருவன் சொல்ல...

"அதெல்லாம் இனி சின்னவரு கவனிச்சுக்குவாரு... ஏதோ சின்ன வயசுலே நடந்ததை மனசுலே வெச்சுட்டு இவங்களைக் கைவிட்ற மாட்டாரு... அப்படி நெனைக்கிறவரா இருந்தா வந்தவுடன் பணத்தை எடுத்து நீட்டி அதைச் செய், இதைச் செய்னு சொல்லுவாரா? அதெல்லாம் இவங்களுக்கு ஒரு வழி செஞ்சிட்டுத்தான் ஊருக்குப் போவார். வேணும்னா பாரேன்..."

— பீடியின் கடைசி 'தம்'மை ஆழமாக இழுத்து, தீக்கண்ணைத் தரையில் நசுக்கியபடி மற்றவன் சொல்லிவிட்டு, நிறுத்திய வேலையைத் தொடர...

வெளித் திண்ணையில் உட்கார்ந்திருந்த இவன் செவியிலும் அவர்களின் உரையாடல் விழத்தான் செய்கிறது...

சூரியன் தன் பயணத்தை முடித்துக் கொண்டு மேற்கு வீட்டில் நுழைகையில் இவன் தந்தையின் இறுதிப் பயணம் ஆரம்பமாகிறது.

பெண்கள் ஓவென இரைச்சலிட்டு வாசல் வரை வந்து அழ, ஊரே கூடி நின்று வழியனுப்ப...

இவன் — இவன் சித்தப்பா — இன்னும் இருவரும் தோளில் சுமந்த பூந்தேரில் பயணித்த இவன் அப்பாவை இடுகாட்டில் இறக்கி வைத்துக் கடைசியாய் அவர் முகத்தை இவனுக்குக் காட்டி, குழியில் இறக்கி, இவன் கையால் மண் தள்ளச் செய்து...

ஆயிற்று...

அடுத்த சில நாட்களிலேயே மற்ற சடங்கு சம்பிரதாயங்கள் எல்லாம் முடிந்தாயிற்று.

வந்திருந்தவர்கள் ஒவ்வொருவராய்ப் போகத் தொடங்க... வீடே வெறிச்சோடிப் போயிருக்கிறது...

மத்தியான வண்டியைப் பிடிக்க இவன் சித்தப்பாவும் புறப்பட்டுக் கொண்டிருக்க...

இவன் — இவன் அம்மா — தங்கைகள் அனைவரும் அவரையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

புறப்பட்டவர் இவனிடம் வருகிறார்.

"எல்லோரையும் நல்லா கவனிச்சுக்க... நீதான் இனி எல்லாம். வேலை வேலைன்னு அலைஞ்சு வீணாக் காலத்தைக் கடத்தாதே. நீ படிச்ச பத்தாம் கிளாஸ் படிப்புக்கு கலெக்டர் உத்தியோகமா கெடைச்சிடப் போகுது? பேசாம ஊர்ல கெடைக்கிற வேலையை ஒழுங்காச் செஞ்சு குடும்பத்துக்குக் கஞ்சி ஊத்தற வழியைப் பாரு. என்ன புரிஞ்சுதா?"

"ம்..."

"உங்கப்பா வேலை செஞ்ச இடத்துலேர்ந்து ஆயிரமோ, ஐந்நூறோ தர்றதாச் சொன்னாங்க, வாங்கிக்க..."

"ம்..."

"அப்புறம்... தேர் கட்டினது, குழி வெட்டினது, வந்தவங்களுக்குச் சாப்பாடு செஞ்சு போட்டது... இந்த வகையிலே இருநூத்தி எண்பத்தேழு ரூபாய் நான் செலவு பண்ணியிருக்கேன். அந்தப் பணத்தை வாங்கினதும் மறக்காம அனுப்பி வை... என்ன...?"

"......"

"போகும் போது சொல்லிட்டுப் போகக் கூடாது. ஏதாவதுன்னா லெட்டர் போடு..."

அவர் கிளம்ப, இவனுக்குள் உணர்ச்சிகளின் கொந்தளிப்பு...

"கொஞ்சம் நில்லுங்க!"

இவன் சொல்ல, அவர் நிற்கிறார்.

விடுவிடுவென்று வீட்டிற்குள் நுழைந்தவன், சில நிமிடங்களில் திரும்புகிறான்.

"இந்தாங்க நீங்க செலவு பண்ணிய பணம்..." — ரூபாய்த் தாள்களை நீட்டுகிறான்.

'ஏது இந்தப் பணம்?' — என்பது போல அவர் இவனைப் பார்க்க...

"ஏதுன்னு பார்க்கிறீங்களா... தான் சாகப் போறது தெரிஞ்சுதானோ என்னவோ எனக்கு ஆர்டர் வந்திருக்கிற சேல்ஸ்மேன் வேலைக்கு டெபாசிட் கட்டறதுக்காகத் தான் சாகறதுக்கு முந்தின நாள் அம்மாவோட தாலியை வித்துப் பணமாக்கிட்டு வந்தார் அப்பா. அந்தப் பணம்தான் இது... இந்தாங்க வாங்கிக்குங்க..."

— இவன் சொல்ல, அவர் ஏதும் பேசவில்லை. காலில் செருப்பை மாட்டிக்கொண்டு அங்கிருந்து கிளம்புகிறார்.

இத்தனை நேரமாய் அடக்கி வைத்திருந்த அழுகை உடைத்துக்கொள்ள, இவன் பச்சைக் குழந்தை போலத் தாயின் மடியில் முகம் புதைத்து அழத் தொடங்குகிறான்.

"மத்திய அரசு ஊழியர்களுக்குத்தான் சம்பள உயர்வு கொடுத்துட்டாங்களே, இன்னும் என்ன யோசனை?"

"அதன் கூடவே உயர்ந்து வரும் விலைவாசியைப் பற்றித்தான்!"



பழநியின் குறுகலான சந்துகளில் ஒன்று மேற்கு தேவாங்கர் தெரு.

''ஏங்க, இங்க நாயுடுன்னு ஒருத்தர் இருக்காரே... அவரு வீடு எங்கேங்க?''

''நாயுடுவா...? நீங்க எந்த நாயுடுவைச் சொல்றீங்க?''

''அதாங்க... பாங்குல ஆபீஸரா இருந்தாரே, அவருங்க.''

''அடேடே! பெரிய போஸ்டாபீஸ் எதிரிலே இப்போ லாட்டரி டிக்கெட் வித்துக்கிட்டு இருக்காரே, அவரா?''

வீட்டைக் காட்டுகிறார்.

பாங்க் ஆபீஸராயிருந்த வெங்கட்ராம நாயுடு லாட்டரி சீட்டு விற்பனையாளராக மாறியது எப்படி? அது ஒரு சோகக் கதை.



# நாயுடுவுக்கு நல்லது நடக்குமா?

குறுகலான, உயரம் குறைவான வீட்டிற்குள் தலைகுனிந்து செல்கிறோம்.

கையில் பொடி டப்பாவோடு அமர்ந்திருக்கும் நாயுடு எங்களைப் பார்த்தவுடன் ஏற்கெனவே டைப் அடித்து வைத்திருந்த தமது சோக வரலாற்றைக் கொடுத்துவிட்டுப் பதுமையாகிவிட்டார்.

1946 ஆம் வருடம் ஒரு சாதாரண கிளார்க்காக சென்ட்ரல் பாங்க் ஆஃப் இந்தியாவில் உத்தியோகத்தில் சேர்ந்த நாயுடு, 1969 இல் அக்கௌண்டண்ட்டாகப் பதவி உயர்வு பெற்று, பின்னர் உடனடியாக 1970 இல் மானேஜராகப் பதவி உயர்வு அடைந்தார்! சிவகாசியில் மானேஜராகப் பணியாற்றிய போதுதான் அந்த நிகழ்ச்சி நடந்தது!

'சிறு தொழில் அதிபர்களை ஊக்குவிக்கக் கடன் வழங்க வேண்டும்!' என்று அரசு வங்கிகளை முடுக்கிவிட்ட நேரம். சிவகாசியில் அகர்பத்தி தயாரிக்கும் சிறு தொழிற்சாலை; மற்றும் பூக்களிலிருந்து எண்ணெய் எடுக்கும் தொழிற்சாலை ஆகியவற்றை ஆரம்பிப்பதற்காக — நான்கு பார்ட்டிகள் நாயுடுவிடம் கடன் கேட்டு வந்தனர். 'கடனைத் திருப்பிக் கட்ட வசதியுள்ளவர்கள்!' என்று மாநில அரசு அதிகாரி கொடுத்த சான்றிதழோடு வந்து சந்தித்தனர். நாயுடுவும், அந்த பார்ட்டிகளின் பின்னணியை நன்கு விசாரித்து மெஷின்களை வாங்கக் கடன் கொடுத்தார். பிறகு நாயுடு, மதுரை டிவிஷனல் ஆபீஸில் டெபுடி சீஃப் ஆபீஸராகப் பதவி உயர்வு கிடைக்கவே மதுரைக்குச் சென்றார்.

1981 ஆம் ஆண்டு, நாயுடு கடன் கொடுத்த பார்ட்டிகள் போலி பார்ட்டிகள் என்றும், பாங்கை ஏமாற்றி விட்டார்கள் என்றும் கடன் தொகையை இதுவரை திருப்பிக் கட்டவில்லையென்றும் சிவகாசி கிளையிலிருந்து நாயுடுவுக்கு ஒரு ரிப்போர்ட் வருகிறது. ரிப்போர்ட்டைப் பார்த்து அதிர்ச்சியடைந்த நாயுடு, அந்த பார்ட்டிகளின்மேல் சட்டப்படிநடவடிக்கைஎடுக்குமாறுசென்னையில் உள்ள பிராந்திய அலுவலகத்துக்கு எழுதுகிறார்.

இதற்கிடையில் நாயுடு ஓய்வு பெற வேண்டிய (30.4.82) நாளும் நெருங்கியது. பிப்ரவரி மாதம் பாங்கு நிர்வாகம் சிவகாசி போலி பார்ட்டிகளின் மீது வழக்குத் தொடர்கிறது. பின்னர் நாயுடு ஓய்வு பெறும் கடைசி வாரத்தில் 'உள் விசாரணை' **(departmental enquiry)** நடத்துகிறார்கள்.

30.4.82 அன்று நாயுடு ஓய்வு பெறுகிறார்; 1.5.82 அன்று காலை ஒன்பது மணிக்கு நாயுடுவுக்கு சென்னை பிராந்திய அலுவலகத்திலிருந்து ஒரு தந்தி வருகிறது. 'நீங்கள் கடமையில் அலட்சியமாக இருந்ததாலும், உங்களுக்கு வரையறுக்கப்பட்ட அளவுக்கு மேல் சில பார்ட்டிகளுக்குக் கடன் கொடுத்ததற்காகவும் டிஸ்மிஸ் செய்யப்படுகிறீர்கள்!' என்று!

இது நாயுடுவுக்கு இரண்டாவது அதிர்ச்சி. என்ன செய்வது என்று அறியாது திகைக்கிறார்.

மூன்று பெண்கள், இரண்டு பையன்கள். பெண்களுக்குத் திருமண வயது; பையன்களுக்கோ கல்விச் செலவு! எல்லாவற்றுக்கும் தாம் ஓய்வு பெற்ற பின் கிடைக்கும் கிராஜுவிடியையும், பிராவிடண்ட் பண்ட்

பணத்தையும்தான் எதிர்பார்த்து இருந்தார். இப்போதோ இடி. ஓய்வு பெற்ற பிறகு கிடைத்த டிஸ்மிஸல் ஆர்டரால் கிடைக்க வேண்டிய பாக்கிகள் கிடைக்காத நிலை. ஓரளவு வளமுடன் வாழ்ந்த நாயுடுவின் குடும்ப வாழ்வில் வறுமைச் சூறாவளி வீச ஆரம்பித்து விட்டது!

''என்னுடைய பையனுக்கு மெரிட்லே இஞ்ஜினியரிங் கல்லூரியில் ஸீட் கிடைத்தது. ஓராண்டுதான் படித்தான். தொடர்ந்து படிக்க முடியவில்லை. பாதி நாள் நாங்க பட்டினிதான்! எந்தவிதமான ரிமார்க்கும் இல்லாமல் முப்பத்தாறு வருடங்கள் பாடுபட்டு உழைத்தேன். அதற்குப் பரிசாக என்னை ஓய்வு பெற்ற பிறகு டிஸ்மிஸ் செய்துவிட்டார்கள். இப்போது என் மனநிலை மட்டுமல்ல; உடல்நிலையும் வெகுவாகப் பாதிக்கப்பட்டு விட்டது. வேறு வழியில்லாததால், பழநி பெரிய போஸ்ட் ஆபீஸ் முன்பாக லாட்டரிச் சீட்டு விற்க ஆரம்பித்தேன். இப்போது தினமும் பதினைந்து அல்லது இருபது ரூபாய் கிடைக்கிறது. அதை வைத்துக் கொண்டுதான் ஏழு பேர் கொண்ட எங்கள் குடும்பம் வாழ்ந்து கொண்டிருக்கிறது!'' என்றார் சோகமாக.

கேட்ட நம் மனத்தில் ஒரு நெருடல். ஒரு பக்கம் பாங்கின் உயர் மட்டம், அமைச்சர்கள், அரசியல்வாதிகளுக்குக் கட்டுப்பட்டு, பாங்கு அதிகாரிகளைக் 'கடன் கொடு! கடன் கொடு!' என்று ஏகமாக விரட்டுகிறது. இன்னொரு பக்கம் 'நீ தகுதியற்றவருக்குக் கொடுத்து விட்டாய்; எல்லை மீறி நடந்து கொண்டாய்' என்று கிடுக்கிப்பிடி போடுகிறது. இரு பக்கமும் அடி வாங்கும் மத்தளம் போல் தவிக்கிறார்கள் பாங்கு அதிகாரிகள். அல்ஸரும் ஹார்ட் அட்டாக்கும் வராமல் தப்பித்தாலே பெரிய காரியம்! நாயுடு உண்மையிலேயே வரம்பு மீறித் தவறு செய்திருந்தாலும் செய்திருக்கலாம். ஆனால் அது முன்னர் கூறிய உயர்மட்ட விரட்டலின் விளைவு தானேயன்றி மோசடியல்ல. அப்படி சுயநலத்துக்காக மோசடி செய்தார் என்று நிரூபணமாகாத வரை நாயுடுவை மன்னித்து அவருடைய அப்பழுக்கற்ற 36 வருட சேவையை எண்ணிப் பார்த்து வங்கி பெருந்தன்மையுடன் நடந்து கொள்வதுதானே நியாயம்?

நாயுடுவும் பொறுமையை இழக்கவில்லை. பாங்க் நிர்வாகத்தின் மீது இன்னும் நம்பிக்கை வைத்து நாலு ஆண்டுகளாக கடிதம் மேல் கடிதம் எழுதி வருகிறார். ''எனக்கு நிச்சயம் நல்லது செய்வாங்க ஸார்!'' சோகத்தின் சுமை தாங்காமல் கண்களை மூடிக் கொண்டு சொல்லுகிறார்.

சென்ட்ரல் பாங்க் நிர்வாகம் கருணை காட்டுமா?

— கௌசல்யா

---



# நெருப்பாக நீ

அவினாஷ் ஆர்ப்பாட்டத்துடன் சைக்கிளில் ஏறி மிதிக்கிறான். முதலில் சைக்கிளையே ஏதோ விநோதப்பிராணியைப்போல்பார்த்தவன் தான் அவன். நாலைந்து முறை, சைக்கிளில் ஏறும்போதே கீழே விழுந்தான். இப்போது பரவாயில்லை.

''டிரியோ டிரியோ....''

உற்சாகத்தில் கூக்குரலிட்டபடி, அவன் காற்றைக் கிழித்துக் கொண்டு, பங்களாவை ஒட்டிய தோட்டத்தைச் சுற்றிச் சுற்றி வர......

இந்த ஆரவாரத்தில் துளியும் சம்பந்தமில்லாதவனைப் போல், எங்கேயோ பார்த்துக் கொண்டு நின்ற நந்துவை விரட்டுகிறாள் இன்பா.

''எங்கேயாவது கீழே விழுந்து கையைக் காலை உடைச்சுக்கப் போறான். பராக்குப் பார்த்துட்டு நிக்கறியே....''

நந்து எரிச்சலுடன் அவளைப் பார்க்கிறான்.

''ஆமா, நான் பராக்குப் பார்த்துட்டு நிக்கிறதை நீதான் ரொம்ப கண்டே.... ஒரு நிமிஷம் என்னைச் சும்மா நிக்கவிட மாட்டியே. அந்த மனுஷனோட எவனால சுத்த முடியும். மாதுவை அனுப்பு.....''

இன்பா முறைக்கிறாள்.

''அவினாஷ் மாதுவோட பிரதரா, உன்னோட பிரதரா....''

''..............''

''இந்த வயசுல உன்னாலே முடியாதுன்னா, மாதுவாலே மாத்திரம் முடியுமா.... உங்க அப்பா கொடுக்கிற சம்பளத்துக்கு, அவன் தரையில் உருண்டு, புரண்டு தோப்புக்கரணம் போடாததுதான் பாக்கி.''

நந்து இதற்கு மேலும் நிற்கப் பிடிக்காதவனாய் அவினாஷின் பின்னால் ஓட.... அவள் மாதையனைச் சைகையால் அழைக்கிறாள்.

''மாதையா.....''

''அம்மா.....''

அவனது அனாவசிய பயத்தை விரட்டியடிக்க வேண்டுமென்றுதான் முதலில் நினைத்தாள் அவள்.

இன்பாவை மங்களாம்பாளாக நினைத்துக் கொண்டு என்னமாய் நடுங்குகிறான் அவன்?

'இதப் பாரு.... என் உடம்புல எந்த ஆவியும் இல்லே.'

— இப்படிச் சொல்ல நினைத்தவள் சிறிது நாட்களுக்கு மாத்திரம் தான் மங்களாம்பாளாக இருப்பது என்கிற முடிவுக்கு வந்துவிட்டாள்.

இதற்குக் காரணம், சற்றுமுன் கேட்ட புவனேசுவரியின் குரல்தான்.

ஒவ்வொருத்தர் வருஷக் கணக்கா வேஷம் போடறாங்க... நாம, தேமப் போகல்லே. நம்ம மேலே திணிக்கப்பட்ட வேஷத்தைக் கொஞ்ச நாட்களுக்குச் சுமந் தாத்தான் என்ன...?

அவள் மங்களாம்பாளாகவே — மாதைய னிடம் கேள்விகளைத் தொடுக்க ஆரம்பிக் கிறாள்...

"மாதையா... சின்னம்மாவுக்கு என்ன உடம்பு...?"

அவன், இதற்கு என்ன பதிலைச் சொல் வது என்பது போல் திகைத்து நிற்கிறான்.

"இல்லே... நான் இந்த வீட்டுலே இருக்கி றப்ப — இவளும், அவினாஷும் நல்லாத் தானே இருந்தாங்க...?"

இது போதும் மாதையனை முடுக்கிவிட... அவன் பொலபொலவென அழத் தொடங் குகிறான்.

"உங்களுக்குத் தெரியாதா தாயே... நீங்க காணாமப் போயிட்டதா எசமான் வந்து சொன்னதுலேயிருந்தே — சின்னம்மா இப் படித்தான் இருக்காங்க... யார் கூடவும் பேசறதே இல்லே... எசமானும் எத்தனையோ வைத்தியம் செஞ்சு பார்த்துட்டாரு... அவினா ஷோட தம்பி, கிணத்துல விழுந்தப்பக் கூட, பிழியப் பிழிய அழுதாங்களே தவிர... வாயைத் திறந்து ஒரு வார்த்தை கூட..."

மேலே தொடரப் போனவன், இன்பா வின் பார்வை தன் மீது நிலைகுத்தி இருப் பதைக் கண்டு, தலை குனிகிறான்.

"மாதையா... நீ யார்கிட்டே பேசறேங்கிற நினைப்பிருக்கா...?"

"......"

"நீ, என்னோட விசுவாசமான அதே பழைய மாதையன்தானா... இல்லே இளைய ஜமீன்தாரிணியோட கையாளா...?"

"ஐயோ!"

மாதையன் பளீர் பளீரெனக் கன்னத்தில் போட்டுக் கொள்கிறான்.

"என்னம்மா அப்படிச் சொல்லிட்டீங்க. உங்க உப்பைத் தின்ன நன்றிக் கடனுக்குத்தான் நான் இன்னமும் இந்த வீட்டுலே இருக் கேனே தவிர — வேறே யாருக்காகவும் இல்லே. அது மாத்திரம் இல்லே. உங்களுக்கு என்னவாச்சுன்னு தெரிஞ்சுக்காமே நான் இந்த வீட்டை விட்டுப் போக விரும்பலே..."

"எனக்கு என்னவாச்சுன்னு உனக்குத் தெரியாதா?"

"தெரியாதே தாயே... நீங்க சொன்னாத் தெரிஞ்சுக்குவேன்... அய்யாவோட சாமி கும்புட ராவோட ராவாக் கிளம்பினீங்க. நான்தான் ரயிலேத்தி விட வண்டி கட்டிட்டு வந்தேன். இப்படி ஒரே முட்டா சாமிகிட்டயே போய்ச் சேர்ந்துடுவீங்கன்னு தெரிஞ்சி ருந்தா, நாலு வார்த்தை பேசியாவது இருப் பேனே... இப்ப என்கிட்டே சொல்லுங்க... என்ன ஆச்சு உங்களுக்கு...? எனக்கும் எம் பொஞ்சாதிக்கும் ரொம்ப நாள் வரைக்கும் பந்தயம்... அவ, அய்யாவோட கொடுமை தாள மாட்டாம, நீங்க ஓடிப் போயிருப்பீங் கன்னு சொன்னா... நான் சொன்னேன்... எத்தனை கஷ்டம் வந்தாலும் நீங்க சகிச்சிக் கிட்டு இருப்பீங்களே தவிர ஓடிப் போய், கெட்ட பேரை ஜமீன் வமிசத்துக்குத் தேடிக் கொடுக்க மாட்டீங்கன்னு... ஏம்மா, நான் சொன்னது சரிதானே...?"

இதற்கு என்ன பதிலைச் சொல்லுவாள் இன்பா? மௌனமாய்த் தலையை அசைத்து வைத்தாள்...

"சரி.. சின்னம்மா இத்தனை வருஷத்துல பேசினதே இல்லையா...? என்கிட்ட எதையும் மறைக்க முடியாது மாதைய்யா... நிஜத்தைச் சொல்லு..."

மாதையன் தரும சங்கடத்துடன், தனது சிக்குப் பிடித்த தலையைச் சொறிகிறான்.

'தெய்வமாப் போன அம்மா கேக்கறாங்க. பொய் சொல்ல முடியுமோ... இல்லே, பொய் சொன்னாத்தான் — அவங்களுக்குத் தெரியாமப் போயிடுமா...?'

அவன், அடிக்குரலில் கேட்கிறான்.

"சின்னம்மா, அவினாஷ் தம்பியைப் பார்க் கறப்ப — அதுவும் யாருமில்லாத நேரத்துல ரெண்டு வார்த்தை பேசுவாங்க... ஆனால் அந்தப் பிள்ளைக்கு அதைப் புரிஞ்சுக்கக் கூட புத்தி சுவாதீனத்துலே இல்லே... இதையெல் லாம் நான் சொல்லித்தான் நீங்க தெரிஞ்சுக் கணுமா...?"

"எனக்கு எல்லாம் தெரியும் மாதையா... ஆனா — என்கிட்டே நீ எந்த அளவுக்கு உண் மையா இருக்கேன்னு தெரிஞ்சுக்கத்தான் இதையெல்லாம் கேட்கிறேன். ஆமா, என் கிட்ட இப்ப சொன்ன மாதிரி, வேறே யார் கிட்டயாவது இத்தனையையும் சொல்லியிருக் கியா...?"

"சத்தியமா இல்லீங்க... ஜமீன்தாருக்குக் கூட, சின்னம்மா பேசற விஷயம் தெரியா துங்க... நான்தான் ஒரு தடவை கண்டுபிடிச் சேன். உடனே அந்தம்மா, என் கால்லே விழுந்து கெஞ்சினாங்க... 'நான் பேசறேன்னு யாருக்கும் தெரிய வேண்டாம் மாது... தெரிஞ்சா — ஜமீன்தாரிணி போன இடத் துக்கு நானும் போயிடுவேன்னு கதறி அழு தாங்க... அதுலேயிருந்து 'கப்சிப்' புனு ஆயிட் டேன்..."

இன்பா பிரமிப்புடன் அவனையே பார்த் துக் கொண்டிருக்கிறாள்.

'இவன்தான் எத்தனை உயர்ந்தவன்...?'

அவளது நினைப்பின் போக்கு அறியாமல் — அவன் சகலத்தையும் சொல்லத் தொடங்கு கிறான்.

"தாயே... நீங்க இருக்கையில் இருந்த சின்னம்மாவே இல்லீங்க இப்ப... ரொம்ப மாறிட்டாங்க... அப்ப ஒவ்வொரு விஷயத் துக்கும் என்னமா ஆர்ப்பாட்டம் பண்ணு வாங்க... இப்ப வாயே திறக்கறதில்லே..."

புவனாவைப் பற்றி அவன் சொன்ன விஷ யங்கள் அனைத்துமே — அதிர்ச்சி அளிக்கக் கூடியதாய்...

அந்த மாளிகையில் படுக்கையோடு படுக் கையாய்க் கிடக்கும் புவனா... மங்களாம் பாளின் மறைவு கேட்ட அன்று முதல் பேச்சை நிறுத்தினவள்தானாம்...

மாதையனும் மற்றவர்களைப் போலவே சின்னம்மாவிற்குப் பேச்சு போய் விட்டது என்றே நம்பியிருக்கிறான்.

டாக்டர் — வைத்தியத்துக்கு என்று வந்த போதெல்லாம், மருந்து சாப்பிடவும், ஊசி போட்டுக் கொள்ளவும் மௌனமாகவே எதிர்ப்புத் தெரிவித்திருக்கிறான் புவனா.

வாய் பேசாவிட்டாலும் தெம்பும் திடமுமாய் நடமாடிக் கொண்டிருந்தவளைப் படுக்கையில் தள்ளியது மகனின் மரணச் செய்தி தான்...

அவினாஷ் சித்தம் பேதலிக்கும் முன் வரையில் தாயுடன்தான் படுத்துத் தூங்குவான்... அவனுக்கு, அப்பாவைக் கண்டால் வெறுப்பு...

வெறுப்புக்குக் காரணம் — தன் பிரியத்துக்குரிய பெரியம்மாவை — அப்பா, அடிக்கடி அடித்தும், திட்டியும் துன்புறுத்தியதுதான்.

சின்ன வயசானாலும் புத்தி கூர்மையுள்ளவன். அந்த வயசிலேயே நியாய அநியாயம் எதுவென்று தெரிந்திருந்தது. அம்மாவிடம் ரகசியமாய்ச் சண்டை போடுவான்.

"உனக்குத்தான் இத்தனை நகை இருக்கே... எதுக்காகப் பெரியம்மாவோட நகையும் வேணும்னு அப்பாகிட்டே கேட்கறே... பாரு... அப்பா, பெரியம்மாவை அடிக்கிறார்..."

இப்படி அவன் எதிர்க்கத் தொடங்கிய பிறகு — புவனா வெளிப்படையாக, குழந்தைகள் எதிரில் புருஷனிடம் எதுவுமே கேட்காமல்தான் இருந்தாள்.

மங்களாம்பாள் தன்னை விட்டு எங்கோ காணாமல் போய்விட்டதாக லோகநாதன், ஊர் வந்து சேர்ந்ததும் சொன்ன போது —



ஏற்கெனவே இரண்டு நாட்களாய் உடல் நலம் குன்றிப் படுத்திருந்த தன் தாயைப் பிடித்து ஆவேசத்துடன் உலுக்கினான் அவினாஷ்.

''ஏய்... பெரியம்மாவை நீயும் அப்பாவுமா சேர்ந்து என்ன செஞ்சீங்க...? சொல்லு... சொல்லலையின்னா அடிப்பேன்... கண்ணைத் தோண்டிடுவேன்... நீ எனக்கு அம்மாவே இல்லே... உன்னை எனக்குப் பிடிக்கலே...''

அவன் கத்திய போது, லோகநாதன்தான் ஓர் உறுமலுடன் அவனை இழுத்து அந்தண்டை தள்ளினாரே தவிர, புவனா அழுதபடி சும்மா உட்கார்ந்திருந்தாள்...

அப்பொழுதே கடும் காய்ச்சலில் விழுந்தான் அவினாஷ்... அதிலிருந்து உயிர் பிழைத்ததே பெரும் விஷயம்.

அடுத்த அதிர்ச்சி, தம்பி கிணற்றில் விழுந்ததைப் பார்த்து அலறியது...

அந்தக் கணத்திலேயே மறுபடியும் காய்ச்சல் வர... தன் தாயை அணைத்துக் கொண்டு, அவன் கதறிய கதறலை இப்பொழுது நினைத்தாலும் மெய் சிலிர்க்கும் மாதையனுக்கு...

''அம்மா... நீ இந்த அப்பாவோட பேசாதே... இவர்தான் பெரியம்மாவைக் கொன்னுட்டார். உன்னையும் கொல்லப் போறார்... பெரியம்மா என் கனவுல வந்து சொன்னா... உங்க மூணு பேரையும் 'என் கூட அழைச்சிட்டுப் போகப் போறேன்னு'... இதோ... தம்பியைக் கொண்டு போயிட்டா. அடுத்தாப்பல என்னையும், நந்துவையும் அழைச்சுக்கப் போறா... நான் போறேன். நீ, பெரியம்மாவோட நகைங்களைப் போட்டுட்டு சந்தோஷமா இரு...''

ஜுர வேகத்தில் கதறிய சிறுவனை, டாக்டரும், லோகநாதனுமாய்ப் பிடித்திழுத்துத் தனி அறையில் அடைத்தார்கள்... ஸ்டேஷன் மாஸ்டர் தன் பங்குக்கு—சிறுவனைக் காற்றோ, கறுப்போ தாக்கி விட்டதாகச் சொல்லி, காய்ச்சலைப் பொருட்படுத்தாமல், பச்சைத் தண்ணீரில் குளிக்க வைத்து, வெற்றுடம்போடு கொண்டு வந்து தன் எதிரே அமர வைத்து, வேப்பிலையால் அடித்துப் பேயை விரட்டும் முயற்சியில் இறங்கினார்...

காலையில் மந்திரம்... மாலையில் மருந்துவம்...

மந்திரத்தில் அடிபட்டு வேதனையில் துடித்த உடம்பு, மருத்துவத்தில் தூக்கமாய்த் தூங்கியது... நினைவு நீச்சில்லாத தூக்கம்... கண் விழித்தால் குளிக்க அழைத்துச் செல்வார் ஸ்டேஷன் மாஸ்டர்...

''வேணாம்... வேணாம் மாமா... என்னை விட்டுடுங்க... தூங்கப் போறேன்... ஐயோ, அடிக்காதீங்க... வலிக்குது... வலிக்குதுப்பா...''

சிறுவனின் கதறல் காதில் விழும்போதெல்லாம் ஓடி வருவாள் புவனா. அவனைக் கண்ணால் காண முடியாமல் தவியாய்த் தவிப்பாள்.

ஒரு நாள் மாலைப் பொழுது... அறையின் ஒருபுறமாய்ச் சுருண்டு கிடக்கும் சிறுவனை மெல்லிய குரலில் அவள் எழுப்ப... அதே அறையின் இருண்ட பகுதியில், சிறுவனுக்குக் காவலாய்ப் படுத்திருந்த மாதையன் திடுக்கிட்டு எழ...

அவனைப் பார்த்ததும் விதிர் விதிர்த்துப் போய் விட்டாள் புவனா...

''சின்னம்மா... நீங்களா இப்ப தம்பியைப் பேர் சொல்லிக் கூப்பிட்டீங்க...?''

''......''

''ஐயோ... இதை உடனே ஜமீன்தார் கிட்ட சொல்லணுங்க... ரொம்ப சந்தோஷப் படுவாரு...''

அவள் அதிர்ந்து போய், சடாரென மாதையனின் பாதங்களில் விழுகிறாள்.

''தயவு செஞ்சு இதை வெளியே சொல்லாதே மாதையா. உன்னை, என் கூடப் பொறந்த அண்ணன் மாதிரி நினைச்சுச் சொல்றேன்...''

''ஏம்மா இப்படி சொல்றீங்க...? ஜமீன்தார், நீங்க பேசலையேன்னு எத்தனை கவலைப் படறாங்க...? எவ்வளவு செலவு பண்ணி, வைத்தியம் பார்க்கறாங்க...?''

''நீ நினைக்கறது தப்பு மாதையா... நான் பேசினால் பிரச்னை வரும்... ஜமீன்தாருக்கு நான் பேச்சிழந்து போகலையின்னு தெரியும்... இருந்தாலும் எங்கே பேசி, ஏதாவது அவஸ்தையை உண்டு பண்ணிடுவேனோன்னு பயப் படறாரு. நான் பேசாமல் இருக்கிறது அவருக்கு நல்லது... என் குழந்தை நந்து கூட, என்னை ஒரு ஊமையா நினைக்கத் தொடங்கிட்டான்... நான் இப்படியே இருந்துட்டுப் போறேன்... எனக்கு இந்தத் தண்டனை தேவைதான்...''

''டாக்டரய்யாவுக்கு உண்மை தெரியுங்களா...?''

''தெரியாது... யாருக்கும் தெரியவும் வேண்டாம்... 'மாதையா, தயவு செஞ்சு... என் குழந்தைங்களுக்குத் தாயா நான் இருந்துட்டுப் போறதைத் தடுத்துடாதே!''

அன்று முதல் இன்று வரை... மாதையன் பலவிதங்களில் புவனாவிற்கு உதவுகிறான்...

அவைகளில் மிக முக்கியமான உதவி — புவனா அவினாஷுடன் பேசும் பொழுது — வேறு யாரும் மாடிக்கு வராதபடி காவலிருப்பது!

அடுத்தது — டாக்டர் புவனாவிற்குத் தரும் மாத்திரைகளை யாருக்கும் தெரியாமல் தோட்டத்து, உரக் குழியில் கொண்டு போய்ப் போடுவது!

''நான் உங்க உப்பைத் தின்னுட்டு, உங்க சக்களத்திக்கு உதவறேன்னு கோவிச்சுக் காதீங்க ஆத்தா... குழந்தைங்களுக்காகச் செய்யறேன்... என்னை மன்னிச்சிடுங்க...''

மாதையன் சொல்லும் போதே — இன்பாவின் கண்களை நீர் திரையிடுகிறது... அவனுள் ஒரு தீர்மானம்:

'புவனாவை நான் சந்திக்கணும்!'

(தொடரும்)

முற்றிலும் நவீனமான முறையில் தயாரான சுவையான PR பிராண்ட் அக்மார்க் நெய், மற்றும் சொந்த டைரியில் தயாராகும் புதிய கோயமுத்தூர் வெண்ணெய் பம்பாயில் கிடைக்குமிடம்:




**P.R. ENTERPRISES (P. RAMALINGAM)**
**BHANDARKAR ROAD, MATUNGA, BOMBAY - 19**

மதுரூஸ் நல்லெண்ணெய் மற்றும் தே. எண்ணெய் சில்லரையாக பம்பாயில் வாங்கச் சிறந்த ஒரே இடம்:

**P.R. OIL DEPOT,**
**NO. 10, SANGEET SAGAR, MATUNGA, BOMBAY - 19.**

கடந்த 30 ஆண்டுகளாக கண்ணை இமை காப்பது போல் காத்து வந்த எங்களின் வாடிக்கையாளர்களுக்காகவே ஏற்படுத்திய முற்றிலும் புதிய FIXED DEPOSIT திட்டத்தில் சேர அழைக்கிறோம். முழு விவரங்களுக்கு:

**P.R. INVESTMENTS CO.,**
**BHANDARKAR ROAD,**
**MATUNGA, BOMBAY - 19.**

**PHONES: 472077, 476874, 481549**

---

கால்களிலும் கைகளிலும் கால் ஆணி வியாதியினால்
அவதியுறும் நண்பர்களே!
கால் ஆணிக்குக் கைகண்ட அரிய

# பச்சிலைத் தைலம்



கால் ஆணி குணமாக கைகண்ட பச்சிலைத் தைலம்! கால்களிலே தினந்தடவி செருப்பணிந்தும் நடந்திடலாம்! மருந்து தடவி, தண்ணீரில் நடந்தாலும் தீதொன்றும் நேராது! ஒன்றிரண்டு மட்டுமிருந்தால் மாதமொன்றில் குணமாகும்! இரண்டுக்கு மேலிருந்தால் கொஞ்ச நாட்கள் கூடலாகும்! தொடர்ந்து நீங்கள் உபயோகித்தால் பூரணமாய் குணமாகும். எட்டு தினம் உபயோகித்த உடன் நீங்கள் பலனறிவீர்! இம்மருந்தை உபயோகிக்க கால் ஆணியை அறுத்திடுமோர் அவசியம் இல்லை! உத்தரவாதம் அளிக்கின்றோம்! உடன் நீங்கள் அணுகிடுவீர்!



இந்தத் தைலம் கிடைக்கும் இடம்:

**எஸ். முத்துக்குமார்**

திலக் நகர், மாஹிம் (கிழக்கு)
மாஹிம் ஸ்டேஷன் அருகில், தாராவி.
பம்பாய் — 400 017.

# பழனி முருகனிடமும் பாலிடிக்ஸ் பண்ணுகிறார்கள்



* பாலசுப்பிரமணியம்



**''காசியில் மீறிய பழனாபுரி மேவிய பெருமானே அதிசயம் அநேகமுற்ற பழநிமலை.''**

— இப்படி காசியைக் காட்டிலும் அதிக மகிமை உடையது என்று அருணகிரி நாதரால் பாடப் பெற்ற பழநி திருத்தலத்திற்குச் சென்றோம்.

மலையின் அடிவாரத்திலும், பாத விநாயகர் கோவில் அருகிலும் நெருக்கமாக இருந்த தெருக்கள் இப்போது விசாலமாகி, இருந்தன. 'அய்யா... அம்மா...' என்று சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கும் பிச்சைக்காரர்கள் தொல்லை இப்போது இல்லை. "எல்லாம் பொன்னுசாமி தக்காராக வந்த பிறகுதான் ஸார்!'' என்கிறார்கள் பழநி வாசிகள்.

இந்தக் கோவிலைப் பற்றித்தான் சமீப காலங்களில் சில சர்ச்சைகள்! 'புதிதாகத் தங்கத் தேர் செய்யப் போகிறார்கள். ஏராளமான பொருட்செலவில் உருவாகப் போகும் இந்தத் தங்கத் தேருக்குக் கமிட்டி என்று ஒன்றும் போடாமல் தக்கார் பொறுப்பிலேயே விட்டிருக்கிறார்கள்! சிலை பின்னப் பட்டு இருப்பதால் அடுத்த ஆண்டு நடத்தப் போகும்கும்பாபிஷேகத்தைநடத்தக்கூடாது!' என்று.

தமிழ்நாட்டிலேயே அதிக வருமானம் உள்ளது பழநி கோயில்தான். பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவமனைகள் என்று பல தொண்டு ஸ்தாபனங்களை நடத்துகிறது கோயில் நிர்வாகம்.

· கோயில் கர்ப்பக்கிருஹத்துக்குள் நுழைய பண்டாரங்கள் என்று சொல்லப்படும் சிலருக்கு உரிமை உண்டு. அந்தப் பண்டாரங்களில் ஒருவரும், பழநி நகர ஜனதாக் கட்சித் தலைவருமான பாலசுப்பிரமணியத்தைச் சந்திக்கிறோம். சிலை பின்னப்பட்டுக் கிடப்பது குறித்து ஆவேசமாகப் பேசுகிறார்!

''அபிஷேகம் செய்ததால்தான் சிலை பின்னப்பட்டுப் போனதாகச் சொல்கிறார்கள். அபிஷேகம் செய்யும் போது கைகள்

படும் இடமான தலைப்பகுதி போன்றவை அப்படியேதான் இருக்கின்றன. ஆனால் வலது புறத்திலுள்ள மகர குண்டலமும், முதுகும்தான் சூம்பிப் போயிருக்கிறது. இது எப்படிச் சாத்தியமாகும்? இந்தச் சிலை அறுபத்து நான்கு மூலிகைகளைக் கொண்ட நவ பாஷாணத்தால் உருவானது. இதற்கு மருத்துவ சக்திகள் அதிகம். நான் கேள்விப்பட்ட வரையில், 'பெரிய' மனிதர் ஒருவரின் மருத்துவத்திற்காகச் சுரண்டப்பட்டிருக்கிறது! இன்னொரு விஷயமும் இருக்கிறது. இந்த பழநியில் சித்த வைத்தியர்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள். அவர்கள் பேச்சைக் கேட்டு சில குருக்களும் இந்தச் சுரண்டலைச் செய்திருக்கலாம். இந்தச் சிலை இப்படிப் போனதற்காக ஒரு சில குருக்கள் மீது விசாரணை நடந்ததாகவும், ஆனால் திடீ

* பொன்னுசாமி



ரென்று அந்த விசாரணை நிறுத்தப்பட்டதாகவும் தெரிகிறது! நடுவில் ஒரு பெண்மணியைத் தக்காராகப் போட்டார்கள். பெண்கள் கர்ப்பக்கிருஹத்துக்குள் நுழைய முடியாது. அவர் காலத்தில்தான் இந்தச் சுரண்டல் நடந்திருக்க வேண்டும்.

''மேலும் இந்தச் சிலை பற்றி ஆராய்வதற்காகப் போடப்பட்ட கமிட்டியின் பரிந்துரைப்படி புதிய சிலை உருவாக்கப்பட வேண்டும். இதற்கு இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு இப்போதிருக்கும் சிலையை உருவாக்கிய போகரின் வாரிசுகளைத்தான் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். புதிய சிலையை வைக்கும் வரை கும்பாபிஷேகம் நடத்[illegible] கூடாது!''

— இவ்வாறு பாலசுப்பிரமணியம் சொல்வதைப் பற்றிப் பலரிடம் விசாரித்த போது, சிலை சுரண்டலைப் பற்றிப் பலர் சொல்லத் தயங்கினாலும், 'பின்னப்பட்டுப் போன சிலையை வைத்துக் கொண்டு கும்பாபிஷேகம் நடத்துவது சரியல்ல' என்றுதான் அபிப்பிராயப்படுகிறார்கள்.

எங்கள் சந்தேகங்களைத் தெளிவுபடுத்திக் கொள்ள, தக்கார் பொன்னுசாமியைச் சந்திக்கச் சென்றோம். அந்தச் சமயத்தில் அவர் இல்லாததால் அவர் சார்பில் கோயில் விவகாரங்களை கவனித்துக் கொள்ளும் சாமி பழனியப்பன், ''பின்னப்பட்டுப் போன சிலையை வைத்துக் கும்பாபிஷேகம் நடத்தத் தடையில்லை!' என்று பல ஆன்மீகவாதிகளும், கும்பாபிஷேகம் நடத்தும் பெரியவர்களும் சொல்லிவிட்டார்கள். இப்போது மாதம் ஒரு தடவை மூலவர் சிலையை தக்கார் சென்று பார்க்கிறார். மேலும் அது பின்னப்பட்டுப் போய்விடக் கூடாது என்பதால் பக்தர்களின் அபிஷேகங்கள் நடத்தப்படுவதில்லை. நித்திய பூஜைகளோடு சரி. இப்போது இருக்கும் தங்கத் தேரைத் திருவாவினன்குடி கோயிலுக்குக் கொடுக்கப் போகிறோம். புதிதாக ஒன்று செய்வதற்கு அனுமதி கேட்டிருக்கிறோம். அனுமதி கிடைத்தவுடன், கமிட்டி போடப்பட்டு வேலை ஆரம்பமாகும். தக்கார் பொறுப்பிலேயே செய்யப் போகிறார்கள் என்பதெல்லாம் வெறும் வதந்திதான்!'' என்றார்.

''இப்போதிருக்கும் முருகன் சிலைக்குக் கீழேயே, பீடத்திற்கு அடியில் இன்னொரு முருகன் சிலை இருப்பதாகவும், முருகன் சன்னதிக்கும் போகர் சன்னதிக்கும் இடையில் ஒரு சுரங்கப் பாதை இருப்பதாகவும் சொல்கிறார்களே?'' என்று சாமி பழனியப்பனிடம் கேட்டபோது, ''இதுபற்றிப் பரவலாகப் பலர் பேசினாலும் எப்படி ஸார் இருக்கும் சிலையையும், பீடத்தையும் எடுத்துவிட்டு (உடைத்து விட்டு) நாம் பார்க்க முடியும்? பக்த கோடிகள் சும்மா இருப்பார்களா?'' என்று எதிர்க்கேள்வி கேட்டார்.

தக்கார் பொன்னுசாமி மிகுந்த பக்தியுள்ளவர் என்றும், அவருடைய ஊரிலிருந்து (காரைக்குடி பக்கம்) கால்நடையாகவே பழநிக்கு வந்து போனவர் என்றும் சொன்னார்கள். இருந்தாலும் இப்போது தோன்றியிருக்கும் சர்ச்சைகள் துரதிர்ஷ்டவசமானவை. தக்காராக இருக்கும் பொன்னுசாமி கோயில் விஷயங்களை பாலிடிக்ஸிற்கு அப்பாற்பட்டு நடத்துவார் என்றே நம்புகிறோம்.

— ப்ரியன்

மேலட்டை வண்ணப்படமும் அண்ணா மாவட்டம் தொடர்பான மற்ற படங்களும் எடுத்தவர்: மனோ

---

மானேஜர்: சொன்னாக் கேளுங்க பெரியவரே, உங்களுக்கெல்லாம் 'சுய வேலை வாய்ப்புக் கடன்' தரமாட்டாங்க...

முதியவர்: அதெப்படி சார்? இந்த வயசிலே எங்களை முதியோர் பள்ளியிலே சேர்த்துக்கிட்டாங்க. படிச்சு முடிச்ச பிறகு அன் எம்ப்ளாயிட் லோன் மட்டும் தரமாட்டீங்கன்னா எப்படி?

— ஆர். அரிகோபி



# "என்னிடம் இருப்பது நிதானமே தவிர, தேக்கம் அல்ல!"

## அண்ணா மாவட்டக் கலெக்டர் பேட்டி

**கல்கி:** திண்டுக்கல்லை ஒட்டியுள்ள தோல் பதனிடும் தொழிற்சாலைகளிலிருந்து வெளியேறும் கழிவு நீரின் பாதிப்பால் அந்தப் பகுதியிலுள்ள நிலத்தடி நீர் எதற்கும் லாயக்கற்றதாகி விட்டது. அதனால் கொட்டப்பட்டி, புதுப்பட்டி, பொன்னுமாந்துறை, முத்தழகுப்பட்டி, ஐயம்பட்டி, காமாட்சிபுரம்... என்று பல கிராமங்களிலுள்ள சுமார் நான்காயிரம் ஏக்கர் நிலத்திற்குமேல் பயிரிட முடியாமல் போய்விட்டது. அதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறீர்கள்?

அண்ணா மாவட்ட கலெக்டர் மாதவன் நம்பியார்: அரசே அவர்களுக்கு ஒரு காலக்கெடு கொடுத்திருக்கிறது. அதற்குள் அந்தத் தொழிற்சாலைகளின் உரிமையாளர்கள் நடவடிக்கை எடுத்து விடுவார்கள் என்று நம்புகிறேன்.

கல்கி: அந்தத் தொழிற்சாலைகளுக்கு லைசென்ஸ் வழங்கும்போதே, அதன் கழிவு நீரால் ஏற்படும் பாதிப்பை அரசு உணர்ந்திருக்க வேண்டாமா?

கலெக்டர்: அதன் சீரியஸ்னெஸ் பற்றி அப்போது உணரவில்லை என்பதைத்தான் இப்போதைய பாதிப்பே காட்டுகிறதே!

கல்கி: கொடுக்கப்பட்டிருக்கும் காலக்கெடுவுக்குள் அதன் உரிமையாளர்கள் நடவடிக்கை எடுக்கவில்லையானால் என்ன செய்வீர்கள்?

கலெக்டர்: நிச்சயம் எடுப்பார்கள். இல்லையென்றால் அரசு நடவடிக்கை எடுக்கும்.

கல்கி: பழனியிலிருக்கும் மணிமேகலை என்பவர் மூன்று வயது பெண் குழந்தைக்குத் தாய். கலப்பு மணம் செய்து கொண்டதால், குழந்தை பிறந்த பிறகு, கணவன் வீட்டாரின் கட்டாயத்தால் கணவர் கைவிட்டு விட்டார். இந்நிலையில், அவர் வாழ்க்கை நடத்த, பழனிக்கு அருகிலுள்ள ஆரம்பப் பள்ளியில் சத்துணவு ஆயாவாக வேலைக்குச் சேர்ந்தார். இந்த வேலையில் அவர், அங்கங்கே வைக்க வேண்டிய 'வெயிட்'களை வைத்துத்தான் சேர்ந்தாராம். அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியர், மணிமேகலையைப் பார்த்து, 'நீ சினிமா ஸ்டார் மாதிரி அழகாக இருக்கிறாய்!' என்ற வர்ணனையோடு தவறாக நடக்க முயற்சி செய்தாராம். அதற்கு மணிமேகலை இணங்காததால், பள்ளிக் கல்வித்துணை ஆய்வாளரிடம் சத்துணவுக் கணக்குகளில் மணிமேகலை 'கோல்மால்' செய்வதாகப் புகார் செய்தாராம். அதை விசாரிக்க வந்த ஆய்வாளரும் தனக்கு 'இணங்கி' விட்டால் தலைமை ஆசிரியர் கொடுத்த புகார்களைப் பற்றிக் கண்டுகொள்ளாமல் விட்டு விடுவதாகக் கூறினாராம். அவருக்கும் இணங்காததால் கடந்த 6.4.84 இல் சஸ்பெண்ட் செய்யப்பட்ட மணிமேகலை இப்போது டிஸ்மிஸ் செய்யப்பட்டு விட்டாராம். சொன்னார். இதுபற்றி நீங்கள் தான் விசாரித்து நடவடிக்கை எடுக்க வேண்டும்.

கலெக்டர்: அநியாயமாக இருக்கிறதே! கட்டாயம் விசாரித்து நடவடிக்கை எடுக்கிறேன். (பள்ளியின் பெயர், சம்பந்தப்பட்ட நபர்களின் பெயர்களைக் கேட்டு வாங்கிக் கொள்கிறார்.)

கல்கி: அய்யம்பாளையம், பட்டிவீரன்பட்டி, வாடிப்பட்டி வழியாகச் செல்லும் மருதா நதியிலிருந்து பிரியும் வஞ்சி ஓடை தாமரைக்குளம், கருங்குளம், ரெங்கசமுத்திரம், சொட்டாங்குளம் ஆகிய நீர்நிலைகளை நிரப்பிக் கொண்டு செல்கிறது. ஆரம்பத்தில் குடிமராமத்தில் இருந்தபோது இருபக்கமும் தண்ணீர் போய்க் கொண்டுதான் இருந்தது. ஆனால் மருதாநதியில் அணை கட்டப்பட்ட பிறகு வஞ்சி ஓடையில் தண்ணீர் விடப்படுவதே இல்லை. அதனால் சுமார் முப்பதாயிரம் ஏக்கருக்கு மேல் வறண்டு கிடக்கிறது. தண்ணீரை மிச்சப்படுத்துவதற்காகத் தென்னை மரங்களுக்குச் சொட்டு நீர்ப் பாசன முறையைக் கையாண்ட போதும் ஆயிரக்கணக்கான மரங்களைக் காப்பாற்ற முடியாமல் தவிக்கின்றனர். வஞ்சி ஓடையில் தண்ணீர் வராததற்குப் பொதுப் பணித்துறைதான் காரணம் என்கிறார்கள் பாதிக்கப்பட்ட விவசாயிகள். நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

கலெக்டர்: இதுகுறித்து அந்த விவசாயிகள் என்னிடமும் வந்து முறையிட்டார்கள். உடனே நான் மாவட்ட வருவாய்த் துறை அலுவலர் போன்றவர்களை நேரடியாக அனுப்பி வைத்து விசாரிக்கச் செய்தேன்.



மழை அளவு குறைந்து போனதுதான் வஞ்சி ஓடை வறண்டதற்குக் காரணம் என்று அறிந்தேன். நீங்கள் சொல்வது போல் பொதுப் பணித் துறையினரின் ஒருதலைப் பட்சமான போக்குத்தான் காரணம் என்று தெரிந்தால் உடனே நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: கடந்த ஏழாண்டு காலமாகக் காப்பி விளைவிக்கும் விவசாயிகளுக்குக் கிலோ ஒன்றுக்குப் பதினைந்து ரூபாய்தான் கொடுத்துக் கொண்டிருக்கிறது, காப்பி வாரியம். ஆனால் உபயோகிப்பாளர் வாங்கும் விலையோ கிலோவுக்கு முப்பத்தாறு ரூபாயிலிருந்து நாற்பது ரூபாய் வரை இருக்கிறது. இதனால் காப்பி விளைவிப்பாளர்கள் மிகவும் மனமுடைந்து போயிருக்கிறார்கள்.

கலெக்டர்: இது தொடர்பாகப் பேசுவதற்குக் காப்பி வாரியத்திற்குக் கடிதம் எழுதுகிறேன். என்னால் ஆனதைச் செய்கிறேன்.

கல்கி: மலைப்பகுதியான தாண்டிக்குடி ரோடில் ஸ்கூட்டர், பைக் என்று இரு சக்கர வாகனங்களில் செல்வோரை வழிமறித்துக் கொள்ளையடிப்பது நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே வருகிறது என்று புட்டி வீரன்பட்டி மக்கள் முறையிடுகிறார்கள்...

கலெக்டர்: அப்படியா? எஸ். பி. யோடு பேசுகிறேன். தகுந்த நடவடிக்கை எடுக்கச் சொல்கிறேன்.

கல்கி: காந்தி கிராமத்திலுள்ள கஸ்தூரிபா மருத்துவமனையில் பணியாற்றும் டாக்டர்கள், நர்ஸ்கள் மற்ற ஊழியர்களுக்கெல்லாம் அரசு நிர்ணயித்துள்ள சம்பள விகிதப்படி சம்பளம் வழங்கப்படுவதில்லையென்று முறையிட்டார்கள். அதுபற்றி அதன் மானேஜிங் டிரஸ்ட்டி பத்மநாபனைச் சந்தித்துக் கேட்ட போது, தனக்கே நானூறு ரூபாய்தான் சம்பளமென்றும், சேவை மனப்பான்மையோடுதான் வேலை செய்ய வேண்டும் என்றும் கூறினார். அதோடு அரசு விகிதப்படி சம்பளம் வழங்கத் தங்களிடம் நிதி வசதியும் இல்லை என்று சொன்னார். நீங்கள் ஏதேனும் செய்ய முடியுமா?

கலெக்டர்: என்னதான் சேவை மனப்பான்மை என்றாலும் சரியான சம்பளம் கொடுக்கப்பட்டுத்தான் ஆக வேண்டும். காந்தி கிராமத்திற்கு நிறைய நிதி உதவிகளும் கிடைக்கின்றன. அப்படியிருக்கும் போது என்ன பிரச்னை? நான் அவர்களோடு பேசுகிறேன்.

கல்கி: தருமத்துப்பட்டியில் வாழ்ந்த திருமாலி என்ற பெண், தனது இரண்டு குழந்தைகளுடனும் கடந்த 15.8.85 அன்று சமயபுரத்திற்கருகில் இறந்து கிடந்திருக்கிறாள். இதற்கு மேலும் மேலும் வரதட்சிணை கேட்டு கணவன் செய்த நிர்ப்பந்தம்தான் காரணம் என்றும், இதுகுறித்து போலீஸில் புகார் செய்தும் போலீஸார் இன்னமும் நடவடிக்கை எடுக்கவில்லையென்றும் அந்தப் பெண் வீட்டார் கூறுகிறார்கள்.

கலெக்டர்: கொடூரமாக இருக்கிறதே. அதுபற்றி உடனடியாக விசாரணை செய்து ஆவன செய்கிறேன். (பெயர், விலாசங்களைக் குறித்துக் கொள்கிறார்.)

கல்கி: அமைச்சர் நெடுஞ்செழியனின் தொகுதியிலுள்ள சித்தையன் கோட்டையில் மருத்துவமனை கட்டுவதாக அரசே சொல்லியிருக்கிறது. அதற்காக நல்ல மனம் படைத்த சையது முகமது என்பவர் ஐந்து ஏக்கர் நிலத்தையும் இனமாக வழங்கிவிட்டார். ஊர்ப் பொதுமக்கள் பதின்மூன்றாயிரம் ரூபாய் பணத்தைக் கூட டெபாஸிட் செய்து விட்டார்கள். இதெல்லாம் நடந்து பன்னிரண்டாண்டு காலமாகியும் ஏதும் நடக்கவில்லை!

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: நத்தத்திற்குச் சுமார் மூன்று மைல் தொலைவிலுள்ள கரந்த மலையிலிருந்து வரும் கன்னிமார் தீர்த்தம் என்ற அருவியிலிருந்து குடிநீர் கொண்டு வந்தால் எந்தக் கோடையிலும் குடிநீர்ப் பஞ்சம் வராது என்கிறார்கள்.

கலெக்டர்: இது தொடர்பாக அத்தொகுதி எம். எல். ஏ. ஆண்டி அம்பலம் அவர்களே என்னிடம் சொன்னார். உடனே சர்வே செய்யச் சொன்னேன். அருமையான திட்டம்தான். ஆனால் அதிகம் செலவாகும்.

நிதி வசதியைக் கருத்தில் கொண்டுதான் அதை நிறைவேற்ற முடியும்.

கல்கி: நத்தத்திற்குக் குடிநீர் வழங்குகிற அளவுக்குச் சுத்தமாக இருந்த நல்லாகுளம் இப்போது கழிப்பிடமாகக் காட்சியளிக்கிறது. சந்தைப் பேட்டை காம்பவுண்டு சுவரெல்லாம் பாழடைந்து கிடக்கிறது. கடந்த பதினைந்து ஆண்டுகளாக அங்குள்ள கைலாசநாதர் கோயில் திருவிழா நடக்காதது மக்களுக்குப் பெரும் குறையாக இருக்கிறது...

கலெக்டர்: சம்பந்தப்பட்டவர்களுடன் தொடர்பு கொண்டு, ஆவன செய்கிறேன்.

கல்கி: கன்னிவாடி அருகிலுள்ள நாயோடை அருவியைத் தடுத்து 'செக் டேம்' ஒன்று கட்டியிருக்கிறார்கள். இப்போது அது மண்மூடிக் கிடப்பதால் தண்ணீர் தேங்குவதில்லை. அதைச் சரி செய்தால் அங்குள்ள கிணறுகளுக்குப் பயனுடையதாக இருக்கும்.

கலெக்டர்: செய்கிறேன்.

கல்கி: பழனியிலிருக்கும் வெங்கட்ராம நாயுடு என்பவர் 'சென்ட்ரல் பேங்க் ஆப் இந்தியா'வில் சிவகாசி கிளையில் மானேஜராக இருந்த போது, மூன்று பேருக்குக் கடன் கொடுத்திருக்கிறார். வருவாய்த் துறை அதிகாரிகளால் கொடுக்கப்பட்ட சான்றிதழ்களைப் பார்த்துத்தான் கொடுத்திருக்கிறார். ஆனால் அந்தச் சான்றிதழ்களெல்லாம் பொய்யானவை என்று பிறகுதான் தெரிய வந்திருக்கிறது. எனவே அவர் ஓய்வு பெறும்போது பாங்க் அவரை டிஸ்மிஸ் செய்து, கேஸ் போட்டு பி. எப். போன்ற எதுவும் கொடுக்காமல் நிறுத்தி வைத்து விட்டது.

கலெக்டர்: (அவர் முகவரியைக் குறித்துக் கொண்டு) என்னால் ஆன உதவிகளைச் செய்கிறேன்.

கல்கி: விருப்பாட்சி அருகிலுள்ள தலையூற்றில் அமாவாசை போன்ற முக்கியமான தினங்களில் மக்கள் நீராடச் செல்கிறார்கள். ஆனால் சரியான பாதை வசதி இல்லாதது பெரும் குறையாக இருக்கிறது.

கலெக்டர்: அதை ஒரு சுற்றுலா மையமாக்கும் திட்டமே இருக்கிறது. விரைவில் செய்யப்படும்.

கல்கி: இப்போது பன்றிமலை செல்ல வேண்டுமானால் தாண்டிக்குடி வழியாக முப்பது கி. மீ. தூரம் சுற்றிக் கொண்டுதான் செல்ல வேண்டியிருக்கிறது. தருமத்துப்பட்டியிலிருந்து பன்றிமலை — ஆடலூர் ரோடு போட்டால் அந்த முப்பது கி. மீ. தூரம் சுற்ற வேண்டியதில்லை என்கிறார்கள்.

கலெக்டர்: அதற்கான திட்டமும் இருக்கிறது. விரைவில் வேலைகள் துவங்கி விடும்.

கல்கி: திண்டுக்கல் அருகிலுள்ள இரண்டெல்லைப் பாறை என்ற கிராமத்திலிருந்து நேவிஸ் ஆன்டெனி மெட்டில்டா, ஆஞ்சலா மேரி என்ற மூன்றும் கிளாஸ் படிக்கும் இரண்டு சிறுமிகள் எங்களுக்குக் கடிதம் எழுதியிருந்தார்கள். நேரில் சந்தித்த போது, சுமார் ஒரு கி. மீ. தூரத்திலிருக்கும் மெயின் ரோடில் ஓடும் டவுன் பஸ்கள் தங்கள் கிராமத்திற்கும் வந்தால், தாங்கள் திண்டுக்கல் சென்று படிப்பதற்கு வசதியாக இருக்குமென்றும், அதோடு தங்கள் கிராமத்திலுள்ள அடி குழாய்கள் அடிக்கடி ரிப்பேராகி விடுவதாகவும் முறையிட்டார்கள்...

கலெக்டர்: அடிகுழாய் அமைக்கும் விஷயத்தில் ஓரளவுக்குத் திருப்தி கண்டிருக்கிறோம். ஆனாலும் ரிப்பேர் என்று புகாரா? உடனே கவனிக்கிறேன். டவுன் பஸ் விஷயத்தையும் கவனிக்கிறேன்.

கல்கி: திண்டுக்கல்லில் உள்ள பாலகிருஷ்ணாபுரத்தில் குடியிருக்கும் கி. தனபாக்கியம் என்பவர் வீட்டுக்கு இப்போது பாதையே இல்லை. முனிசிபாலிட்டியில் ஒதுக்கப்பட்டிருக்கும் நாற்பதடி பாதையை 'அண்ணாமலை மில்ஸ்' உரிமையாளர் வேலி போட்டு அடைத்துவிட்டார். அதுபற்றி அந்த அம்மாள் பல புகார்கள் அனுப்பியும் பலனில்லை. கடந்த 8.1.85 அன்று அவர் முனிசிபல் கமிஷனருக்குப் பதிவுத் தபாலில் அனுப்பிய புகார் மனு வாங்கப்படாமல் அவருக்கே திருப்பி அனுப்பப்பட்டிருக்கிறது. இதோ பாருங்கள் அந்தப் புகார்க் கடிதம் (கலெக்டரிடம் அந்தக் கடிதத்தையே கொடுக்கிறோம்). அந்தப் பாதை தொடர்பாக அண்ணாமலையார் மில்ஸ் உரிமையாளர் சாகேத் ராமசாமியை நாங்கள் சந்தித்துக் கேட்டபோது, 'நகராட்சி வந்து பாதை ஒதுக்கிக் கொடுத்தால் எனக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லை!' என்றார். நகராட்சி ஏன் செய்யவில்லை?

கலெக்டர்: இந்த விஷயம் இதுவரை என் கவனத்திற்கு வரவில்லை...

கல்கி: வந்திருக்கிறது. அதுவும் நீங்கள் மலையாளி என்பதால், தமிழ் தெரியாது என்று, அந்த அம்மாள் தனது புகார் மனுவை மலையாளம் தெரிந்த ஒருவரைக் கொண்டு மலையாளத்தில் மொழி பெயர்த்து அனுப்பினாராம்...

கலெக்டர்: அப்படியா? நிஜமாக என் கவனத்திற்கு வரவில்லை. இப்போது நீங்கள் கொண்டு வந்துவிட்டீர்கள். முனிசிபல் கமிஷனரோடு பேசி ஆவன செய்கிறேன்.

கல்கி: நத்தம் அருகிலுள்ள மெய்யம்பட்டியில் சுமார் நாற்றைம்பது ஹரிஜனக் குடும்பங்கள் வசிக்கின்றனர். அவர்களை கனரா பேங்க் தத்தெடுத்துக் கொண்டு வேண்டிய உதவிகளைச் செய்து வருகிறது. அப்படி அரசிடமிருந்து பெற்றுக் கொடுத்த உதவிதான் தேசிய ஊரக வேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் அரசால் கட்டிக் கொடுக்கப்பட்ட வீடுகள். அந்த வீடுகளுக்குள் நாங்கள் சென்று பார்த்த போது, ஜன்னல்களுக்குக் கதவுகள் இல்லை. கெட்டியான பலகைகளால் வாசற் கதவுகள் போடப்படவில்லை. கூரையில்

போடப்பட்டுள்ள சட்டங்கள் கூட எந்தநேரத்திலும் ஒடிந்து விழலாம் என்ற நிலைதான். இத்தனைக்கும் அந்த வீடுகள் சென்ற ஆண்டில்தான் கட்டிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன!

கலெக்டர்: தவறு எப்படி நடந்தது? யாரால் நடந்தது என்பதைக் கண்டுபிடித்து நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: திண்டுக்கல்லில் உள்ள அரசு முத்தையா பிள்ளை மகளிர் கலைக் கல்லூரியில் போதுமான வகுப்பறைகள் கூட இல்லை. மாணவிகள் மரத்தடியில் உட்கார்ந்து பாடம் கேட்கும் அவல நிலை!

கலெக்டர்: உண்மைதான். மேற்கொண்டு வகுப்பறைகள் வேண்டுமென்று அவர்களும் என்னிடம் வந்து முறையிட்டிருக்கிறார்கள். நிதியைப் பொறுத்து ஆவன செய்யப்படும்.

கல்கி: திண்டுக்கல்லில் உள்ள குமரன் பூங்காவின் அவல நிலை பற்றி நாங்கள் சொல்லவே தேவையில்லை....

கலெக்டர்: நிஜம்தான். மக்களுக்கான பொழுது போக்கிடங்களுக்காக இப்போது மூன்றரை லட்சரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. அதில் அப்பூங்கா சிறந்த முறையில் நிர்வகிக்கப்படும்.

கல்கி: நகரின் நடுவிலுள்ள கோபால சமுத்திரமும் ஒரு திறந்தவெளிக் கழிப்பிடமாகத்தான் பயன்பட்டுக் கொண்டிருக்கிறது.

கலெக்டர்: அது ஒரு பெரிய தலைவலிதான். அதை ராணி மங்கம்மாள் போன்ற போக்குவரத்துக் கழகம் ஒன்றிற்குக் குத்தகைக்கு விட்டுக் குளத்தைச் சுற்றிலும் 'ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ்' கட்டச் சொல்லி நிர்வகிக்கலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறோம். விரைவில் ஒரு முடிவு காணப்படும்.

கல்கி: அரண்மனைக் குளமும் இதேபோல்தான் அசிங்கமாகக் கிடக்கிறது!

கலெக்டர்: அது அரசுக்குச் சொந்தமா? பள்ளி வாசலுக்குச் சொந்தமா? இதிலேயே பிரச்னை கிளம்பி கோர்ட் வரை சென்று விட்டது. தீர்ப்பு வந்த பிறகுதான் அதுபற்றி யோசிக்க வேண்டும்.

கல்கி: திண்டுக்கல் நேருஜி நகர் அருகில் நகராட்சியினர் குப்பைகளையும், மலங்களையும் கொண்டு போய்க் கொட்டி வைக்கிறார்கள். அதனால் அந்நகர் மக்கள் சுவாசிக்கவே திணறுகிறார்கள்.

கலெக்டர்: வேறு இடம் கிடைக்கவில்லை; கிடைத்தால் மாற்றி விடலாம்.

கல்கி: திண்டுக்கல்லை விட்டுத் தள்ளி, சிலப்பாடி அருகில் நகராட்சிக்குச் சொந்தமான இடமே இருக்கிறது. அங்கே கொண்டு போய்க் கொட்டலாம். இப்போதுள்ள இடத்தில் ஸ்டேடியம் அமைக்கலாம்.

கலெக்டர்: அப்படியா! கமிஷனரோடு பேசி உடனடியாக நடவடிக்கை எடுக்கிறேன். ஸ்டேடியம் அமைக்கும் உங்கள் யோசனையும் அருமையான யோசனை. சம்பந்தப்பட்டவர்களோடு பேசுகிறேன்.

கல்கி: அதேபோல் இப்போது மிகவும் குறுகிய பரப்பளவில் இருக்கும் பெங்காளி மார்க்கெட்டையும் குமரன் பூங்காவுக்கு அருகில் சும்மா கிடக்கும் இடத்திற்கு மாற்றினால் நகருக்குள் நெரிசல் குறையுமல்லவா?

கலெக்டர்: இதுவும் அருமையான யோசனைதான். மாற்றுவதற்கான நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: பஞ்சாயத்துத் தேர்தலுக்கு முன்பு சாலையோர ஆக்கிரமிப்புக்களை அகற்றும்



## முந்திக் கொண்டார் கலைஞர்!

சில மாதங்களுக்கு முன்னர் திராவிடர் கழக எழுத்தாளர் ஏ.எஸ். வேணு அவர்களின் மணி விழா நடந்தது. அந்தக் கூட்டத்தில் பழம்பெரும் காங்கிரஸ்காரர் செங்கல்வராயனும் கலந்து கொண்டார். அப்போது பேசிய செங்கல்வராயன், "திராவிட இயக்கங்கள்தான் எழுத்தாளர்கள், பேச்சாளர்கள், போன்றவர்களை ஞாபகம் வைத்துக் கொண்டு மணி விழா கொண்டாடுகிறார்கள். ஆனால் காங்கிரஸ் இயக்கத்தார் மறந்து விடுவார்கள்" என்று சற்று விரக்தியுடன் பேசினார்.

மேடையில் வீற்றிருந்த கலைஞருக்கு செங்கல்வராயன் பேசியது மிகவும் வருத்தியது. பேசிவிட்டு வந்து அமர்ந்த செங்கல்வராயனிடத்தில் அவரது பிறந்த நாள் எந்தத் தேதியில் வருகிறது என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டார். அந்தத் தேதி ஆகஸ்ட் 12. இந்தத் தேதிக்கு இரண்டு மாதங்களுக்கு முன்னர் கருணாநிதி ஒரு நபரை செங்கல்வராயனிடத்தில் அனுப்பி அவர் பிறந்த நாளைத் தி.மு.க. சார்பில் ஒரு குழு அமைத்துக் கொண்டாட அனுமதியைக் கேட்டபோது, செங்கல்வராயன் "இந்த வருஷம் எனக்கு 79 வயதுதான், அடுத்த வருடம் பார்த்துக் கொள்ளலாம்" என்று தவிர்த்து விட்டார்.

இதற்கிடையில், 'கலைஞரின் கடிதங்கள்' புத்தகங்கள் வெளியீட்டு விழாவை வைத்துக் கொள்ள பதிப்பாளர் கலைஞரிடம் தேதி கேட்டு வந்தார். "ஆகஸ்ட் 12ம் தேதி வைத்துக் கொள்ளுங்கள்; செங்கல்வராயனைத் தலைவராகப் போடுங்கள்" என்று கூறி அனுப்பினார் கலைஞர். சுற்றியிருந்தவர்களுக்கு செங்கல்வராயனை ஏன் தலைவராகப் போடச் சொன்னார் என்பது புரியவில்லை.

12.8.86 புத்தக வெளியீட்டு விழா. மேற்கண்ட விஷயத்தைச் சொல்லி "இன்று பெரியவர் செங்கல்வராயனின் 79 வது பிறந்த நாள். தி.மு.க. சார்பில் எங்கள் வாழ்த்துக்கள்" என்று கலைஞர் கூறி பொன்னாடை போர்த்தியவுடன் மண்டபமே கை தட்டலில் அதிர்ந்தது.

— கௌசல்யா.

வேலையைத் துவங்கினீர்கள். பலவற்றை இடித்துச் சுத்தப்படுத்தினீர்கள். ஆனால், அ. தி. மு. க. தொழிற்சங்கத் தலைவர் முத்து கோபால் ஐந்தர் லாந்து ரோட்டை ஆக்கிர மித்தபடி ஒரு கட்டடத்தைக் கட்டியுள்ளாரே அதை ஏன் அப்புறப்படுத்தவில்லை? அரசியல் செல்வாக்கா?

கலெக்டர்: அதெல்லாம் ஒன்றுமில்லை. பஞ்சாயத்துத் தேர்தல் வந்ததால் அப்பணி தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டது; அவ்வளவுதான். இனி மீண்டும் துவங்க இருக்கிறது.

கல்கி: ஓராண்டுக்கு வரி விதிப்பு இல்லை என்றுநகராட்சியில்தீர்மானம்இயற்றப்பட்ட நிலையில் அடுத்த ஆண்டுக்கு வரி விதிப்பதற்காகப் பார்வையிடச் செல்லும் அதிகாரிகள் பலரிடமும் ஆயிரம் இரண்டாயிரம் என்று லஞ்சம் கேட்கிறார்களாம். தராவிட்டால் அதிகமாக வரி விதித்து விடப் போவதாக மிரட்டுகிறார்களாம்!

கலெக்டர்: தவறு செய்பவர்கள் நிச்சயம் தண்டிக்கப்பட வேண்டும். நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: சென்ற ஆண்டு நடந்த அண்ணா மாவட்டத் துவக்க விழாவில் கலந்து கொள்வதற்காக எம். ஜி. ஆர். வந்தபோது நகரிலிருந்த அத்தனை ஸ்பீட் பிரேக்கர்களையும் எடுத்த நீங்கள் மறுபடியும் போடவே இல்லை. ஏன்? அதன் பிறகு விபத்துக்களே நடக்கவில்லையா?

கலெக்டர்: விரைவில் போடப் போகிறோம்.

கல்கி: திண்டுக்கல் அரசு மருத்துவ மனையிலுள்ள ஆபரேஷன் தியேட்டர் மழைக்காலத்தில் ஒழுகுகிறதாம்! அதோடு லஞ்சம் கொடுக்காமல் எந்த நோயாளிக்கும் பெட் கிடைப்பதில்லையாமே? மருத்துவமனை நிர்வாகம் பற்றி அமைச்சர் ஹண்டே கூட வருத்தப்பட்டுப் பேசியிருக்கிறார். அவராலேயே நடவடிக்கை எடுக்க முடியாத அளவுக்கு நிலைமை முற்றிப் போயிருப்பது கேவலம் என்பதே எங்கள் கருத்து. நீங்களாவது ஏதாவது செய்ய முடியுமா?

கலெக்டர்: நானே திடீர் செக் — அப் செய்து நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: திண்டுக்கல் ரயில்வே கேட்டில் மேம்பாலம் கட்டுவதற்கான ஐம்பது சதவிகிதச் செலவை மத்திய அரசு தருவதாக ஒப்புக் கொண்ட பிறகும் இன்னும் ஏன் அந்த வேலைகள் தொடங்கப்படவில்லை?

கலெக்டர்: நிதி நிலைதான் காரணம். வேறென்ன?

கல்கி: திண்டுக்கல் — கரூர் அகல ரயில் பாதை வேலைகள் கூட ஆமை வேகத்தில் தான் நடந்து கொண்டிருக்கின்றன.

கலெக்டர்: அதற்கு நான் ஏதும் செய்ய இயலாது.

கல்கி: பழனி பாதாளச் சாக்கடைத் திட்டம் பாதியில் நிற்பதற்கு என்ன காரணம்?

கலெக்டர்: ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையினர் பாதாளச் சாக்கடை இணைப்புக் கோரும் போதுதான் திட்டத்தை நிறைவேற்ற முடியும். விரைவில் அது நிறைவேற்றப்படும்.

கல்கி: பழனியில் தந்தி ஆபீஸ் ஒன்று தனியாக இல்லையென்பதும், தலைமைத் தபால் நிலையத்திலுள்ள தந்திக் கருவி அடிக்கடி ரிப்பேராகிவிடுகிறதென்பதும் அங்குள்ள மக்களின் முறையீடு.

கலெக்டர்: சம்பந்தப்பட்டவர்களோடு பேசி ஆவன செய்கிறேன்.

கல்கி: திண்டுக்கல்லிலிருந்து முப்பது கி. மீ. தூரத்திலுள்ள இடையக் கோட்டைக்குப் போதுமான பஸ் வசதி இல்லைஎன்பதும், அங்கு ஓர் ஆரம்ப சுகாதார நிலையம் இருந்தும் டாக்டர்கள் இருப்பதில்லை என்பதும் அம்மக்களின் மிகப் பெரும் குறை.

கலெக்டர்: உடனடியாக நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: நிலக்கோட்டையில் மல்லிகைப் பூவிலிருந்து செண்ட் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்று நிறுவ வேண்டும் என்பது அப்பகுதி மக்களின் கோரிக்கை!

கலெக்டர்: எல்லாவற்றையும் அரசேதான் நிறுவ வேண்டும் என்று எதிர்பார்ப்பதை விட, அப்பகுதியிலுள்ள யாராவது அத்தொழிற்சாலையை அமைக்க முன்வந்தால், பேங்க் லோன் உட்பட அனைத்து உதவிகளையும் செய்வதற்கு நான் தயாராய் இருக்கிறேன்.

கல்கி: ரெட்டியார் சத்திரம் அருகிலுள்ள ஸ்ரீராமபுரம் டவுன் பஞ்சாயத்தில் குடிநீருக்காகக் கூட்டாறு என்ற இடத்தில் கிணறு வெட்டும் பணி முக்கால் பகுதி முடிவடைந்த நிலையில் அப்படியே போடப்பட்டதற்கு என்ன காரணம்?

கலெக்டர்: நிதி நிலைப் பற்றாக்குறைதான் காரணம். விரைவில் அப்பணி முடிவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

கல்கி: கொடைக்கானலிலும் குடிநீர்ப் பிரச்னை. அதற்குக் காரணம், சரியான பராமரிப்பு இல்லாததுதானே தவிர, குடிநீர்த் தட்டுப்பாடு அல்ல என்கிறார்களே?

கலெக்டர்: உண்மைதான். 1920 இல் போடப்பட்ட குழாய்கள்தான் இன்னமும் இருக்கின்றன. அவற்றையெல்லாம் மாற்றுவதற்காக 2.15 கோடி நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. விரைவில் சரி செய்யப்பட்டுவிடும்.

கல்கி: கொடைக்கானலிலிருந்து ஐந்து கி.மீ. தொலைவிலுள்ள வில்பட்டி என்னும் ஊரில் ஓர் அரசு உயர்நிலைப் பள்ளி. அதில் பதின்மூன்று ஆசிரியர்கள் வேலை பார்த்தாலும் பல ஆசிரியர்கள் பள்ளி நேரங்களில் இருப்பதில்லையாமே!

கலெக்டர்: கல்வித் துறை அதிகாரியோடு பேசி நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: கொடைக்கானலிலிருக்கும் கொத்தடிமைக் குடும்பம் ஒன்றிலிருந்து குமார் என்ற இருபத்தைந்து வயது வாலிபர் காணாமல் போனது பற்றிக் கடந்த 19.4.86 அன்று புகார் கொடுத்தும் இதுவரை நடவடிக்கை ஏதும் எடுக்கவில்லை என்கிறார்களே?

கலெக்டர்: எஸ். பி. யிடம் பேசுகிறேன்.

கல்கி: கொத்தடிமைகள் மறுவாழ்வுக்காக என்ன செய்யப் போகிறீர்கள்?

கலெக்டர்: முதலில் கூக்கல் பகுதியில் தேயிலைத் தோட்டம் அமைக்கும் திட்டம் இருந்தது. அங்கு போய்ப் பார்த்ததில், அங்கு ஏற்கெனவே பலர் ஆக்கிரமித்துக் கொண்டு பயிரிட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவர்களையும் வெளியேற்ற முடியாது. எனவே வேறு மார்க்கங்களை யோசித்துக் கொண்டிருக்கிறோம்.

கல்கி: இப்போது அவர்கள் 'டேன் இண்டியா' காண்ட்ராக்டர்களிடம் என்ன வேலை செய்கிறார்களோ அதே வேலையைத் தொடர்ந்து செய்யலாம். 'டேன் இண்டியா' விடமுள்ள காண்ட்ராக்டை அரசே ஏற்றுக் கூட்டுறவுச் சங்கம் ஒன்று ஏற்படுத்தலாம். என்று சிலர் அபிப்பிராயம் சொல்கிறார்களே...

கலெக்டர்: பல விதமாகவும் யோசித்துக் கொண்டிருக்கிறோம்.

கல்கி: ஆரம்பத்தில் நீங்கள் கொடைக்கானலில் இருப்பது கொத்தடிமைகள் அல்ல. அங்கே தொழிலாளர் பிரச்னைதான் இருக்கிறது என்று அறிக்கை விட்டதற்கு என்ன காரணம்? ஏதாவது மேலிட நிர்ப்பந்தமா?

கலெக்டர்: இதுவரை அப்படியொரு நிர்ப்பந்தமே ஏற்பட்டதில்லை. எப்போதும் நான் சுதந்திரமாகத்தான் இயங்கிக் கொண்டிருக்கிறேன். நான் எப்போதும் கொத்தடிமைகள் என்றோ கொத்தடிமைகள் இல்லையென்றோ அறிக்கைவிட்டதும் இல்லை. 'நான் விசாரித்த வரையில் தொழிலாளர் பிரச்னை என்றுதான் தெரிகிறது. எதுவாயினும் மேலும் ஆராய்கிறேன்' என்றுதான் சொன்னேன். ஆனால் பத்திரிகைகள் நான் கொத்தடிமைகளே இல்லையென்று சொன்னதாக வெளியிட்டு விட்டன. 'இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி' முதற்கொண்டு எந்தப்பத்திரிகையாளரும் கொத்தடிமைகள் விஷயத்தில் என்னை வந்து விசாரிக்காமலேயே செய்தி வெளியிட்டு விட்டனர். நீங்களாவது விசாரித்தீர்கள். அதுவரைக்கும் சந்தோஷப்படுகிறேன்.

கல்கி: உங்களைப் பற்றி மக்களிடம் அபிப்பிராயம் கேட்டபோது, பழகுவதற்கு மிகவும் இனிமையானவர். ரொம்ப ரொம்ப நல்லவர். ஆனால் நிர்வாகம் என்று பார்க்கும் போது 'டெட் ஸ்லோ' என்கிறார்களே?

கலெக்டர்: அவரவர் வழி அவரவருக்கு. நான் எதையும் யோசித்து நிதானமாகச் செய்தே பழக்கப்பட்டவன். அவசரத்தில் என்னால் எதுவும் செய்துவிட முடியாது. என்



அவன்: "முகூர்த்த நேரத்திலே ஏன் கல்யாண மாப்பிள்ளை ரொம்ப சோகமா இருக்கார்?"

இவன்: "மாமனார்கிட்டேர்ந்து வாங்கின வரதட்சணை முழுக்க நேற்று இரவு நடந்த சீட்டாட்டத்திலே அவர்கிட்டேயே இழந்துட்டாராம்...!"

— ஆர். ஸ்ரீ வெங்கடேஷ்.

இயல்பே அப்படியாகி விட்டது. ஆனாலும் இதுவரை என்னிடம் எந்த ஃபைலாவது தேங்கிக் கிடக்கிறதா என்று பாருங்கள். என்னிடம் இருப்பது நிதானமே தவிர, தேக்கம் அல்ல.

கல்கி: நீங்கள் ஒவ்வொரு திங்கட்கிழமை மட்டும்தான் — அதாவது மனுநீதி நாள் அன்று மட்டும்தான் கலெக்டர் ஆபீஸுக்குச் செல்கிறீர்கள். மற்ற நாட்களில் உங்கள் பங்களாவிலுள்ள கேம்ப் ஆபீஸில்தான் இருக்கிறீர்கள் என்றும் சொல்கிறார்களே, ஏன்?

கலெக்டர்: அண்ணா மாவட்டம் ஆரம்பித்து ஓராண்டு கூட இன்னும் முடிவடையவில்லை என்பதால் சரியான கட்டட வசதி கூட இல்லை. கலெக்டர் ஆபீஸிலுள்ள என் அலுவலக அறையைவிட இங்குதான் எனக்கு வசதியாக இருக்கிறது. அதோடு போன் லைன்கள் இங்கேதான் சுலபமாகக் கிடைக்கின்றன. இவைதான் காரணமே தவிர, வேறெதுவும் இல்லை.

கல்கி: சரியான அலுவலக அறை இல்லை என்று நீங்களே எங்களிடம் முறையிடுகிறீர்களா?

கலெக்டர்: (சிரித்துக்கொண்டே) உண்மையைத்தான் சொன்னேன். இப்போது கலெக்டர் ஆபீஸுக்காக நூறு ஏக்கர் நிலம் வாங்கப்பட்டு, முதற்கட்டப் பணிகளுக்காக 1.7 கோடி ரூபாயும் ஒதுக்கப்பட்டு விட்டது. விரைவில் வேலைகள் துவங்கிவிடும்.

கல்கி: எல்லாவற்றையும் கேட்டுக் குறிப்பெடுத்துக் கொண்டதற்கு மிகவும் நன்றி. வறட்சியின் போது திண்டுக்கல் நகர் குடிநீருக்கு மட்டும் தினந்தோறும் ஒரு லட்ச ரூபாய் செலவு செய்து சமாளிக்க வேண்டியிருந்தது. அதற்கான நிரந்தரப் பரிகாரமாகப் பேரணைத் திட்டத்தைத் துவங்கியுள்ளீர்கள். அதெல்லாம் மிகவும் பாராட்டப்பட வேண்டிய விஷயம். அதுபோல நாம் இப்போது விவாதித்த பிரச்னைகளுக்கும் நீங்கள் உடனடியாகநடவடிக்கைஎடுப்பீர்கள் என்று நம்புகிறோம். வணக்கம்!

கலெக்டர்: நிச்சயமாக. நன்றி! வணக்கம்!

(4) [illegible]

உயிர் வாழக் கரப்பான்பூச்சியைக் கூடத் தின்ற ஸ்ரீனிவாசமூர்த்தி, மூன்றாவது நாளே நாட்கணக்கை இழந்து விட்டார். சன்னமான வட்டவெளிச்சத்தின் மூலம் பகல், இரவு தெரிந்தது. மூன்றாவது நாளில் மயக்க நிலையில் கணக்குத் தப்பிப் போய் எல்லாமே இரவு பகல் போலத் தோன்றியதாம். புலனுணர்வுகளில் மாறுதலும் ஏற்பட்டதாம். (ஸ்ரீனிவாசமூர்த்தி அந்த உணர்ச்சிகளை நுட்பமாக விவரித்தார்). "எங்கே எதற்காக இருக்கிறேன், எனக்கு என்ன வயசு, இன்று என்ன கிழமை என்பதற்கெல்லாம் 'என் வயசு வியாழன்' 'இன்று 78 வது கிழமை' போன்று அபத்தமான பதில்களை நினைத்தேன். தர்க்கம், வாதம் எல்லாம் முக்கியமாகத் தோன்றவில்லை. தாகம் தூங்கிப் போய், பசி பழசாகிப் போய் மனத்தை ஆக்கிரமித்த உத்தரவாதமான ஒரே ஒரு உணர்ச்சி பயம்! 'செத்துப் போகிறேன்' என்ற பயம்.

"சாகாதே! சாகாதே!" என்று மனத்தின் மற்றொரு மூலையில் குரல். "சீனு! நீ எப்படியடா செத்துப் போகலாம்? நீ செய்ய வேண்டிய காரியங்கள் எத்தனை பாக்கியிருக்கின்றன? செய்ய வேண்டிய தானங்கள், தருமங்கள், பாவங்கள், பாடல்கள்?"

"ஒரு வேளைச் சாப்பாடு இல்லையென்றாலே எனக்கு ஒரு மாதிரி இருக்கும். 12 மணி நேரம்தான் தாக்குப் பிடிக்கும். காந்தி எழுபத்தெட்டோ எத்தனையோ நாட்கள் இருந்தாரா? பொட்டி ஸ்ரீராமுலு ஆந்திரம் வரும் வரை தாங்கவில்லை. சுற்றிப்பட்ட பேர் அவரைச் சாப்பிட விடவில்லை. தென்னாப்பிரிக்காவில் ஒரு கறுப்புப் பெண் 102 நாட்கள் வெறும் தண்ணீர், சோடா குடித்துக் கொண்டு வாழ்ந்தாளாம். எனக்கு இரண்டாவது நாளே 'ஹாலூஸினேஷன்'கள் வந்து விட்டன. நான் என்ன அட்டையா? ஒரு வருஷம் ரத்தமில்லாமல் பிழைத்திருக்க? ஒரு சிறு பறவை உணவில்லையெனில் ஐந்து நாளில் செத்துப் போகுமாம். நாய் இருபது நாட்களில். ஸ்ரீனிவாசமூர்த்தி?

"ஸ்ரீனிவாசமூர்த்தி கரப்பான்பூச்சி, கவிதைத் தொகுப்பு எல்லாம் தின்ன ஆரம்பித்து விட்டேன்... கரப்பான்பூச்சியில் கொஞ்சம் தண்ணீர் இருக்க வேண்டும். அதன் மீசையைப் பிரித்து, கால்களைப் பிய்த்து இரண்டாக்கியதில் வெண்மையாக ஒரு திரவம் வழிந்தது."

"ஸார், போதும் ஸார்!"

**சுஜாதா**

"ஸ்டீபன் கிங் ஒரு கதை எழுதியிருக்கிறான். தனியாக மிகச் சிறிய தீவில் மாட்டிக் கொண்ட ஸர்ஜன் சாப்பிட எதுவும் கிடைக்காமல் என்ன செய்கிறான் தெரியுமா?"

"வேண்டாம்!"

"கொஞ்சம் கொஞ்சமாக உடலின் பல பாகங்களை சஸ்திர சிகிச்சை செய்து தனிப்படுத்திச் சாப்பிடுகிறான்! நான் சாப்பிடவில்லை. கதையில் வருகிறது. நான் ஒன்றிரண்டு கரப்பான்பூச்சிதான் உண்டேன். ஓர் எலி ஓடியது. பிடிக்க முடியவில்லை. சில நேரங்களில் என் விரலை யோசித்தேன். இதோ பார் கடித்துத் தழும்பு. என்ன செய்வது, எதையாவது தின்றாக வேண்டும்! எப்படியாவது நேரம் செல்ல வேண்டும். நேரம் கடத்த என்னவெல்லாம் செய்தேன் தெரியுமா? சம்ஸ்கிருதத்தில் ஒவ்வொரு எழுத்தாக எடுத்துக் கொண்டு, 'அந்த எழுத்தில் எத்தனை வார்த்தைகள் எனக்குத் தெரியும்? அவைகளில் எத்தனை நளினமானவை? எத்தனை வன்மையானவை? என்று யோசித்துப் பார்க்க வேண்டியது. அப்புறம் இந்தியா மேப்பை எண்ணிப் பார்த்து, 'கல்கத்தாவா? கல்கத்தாவில் எனக்கு எத்தனை பேரைத் தெரியும்? என்று ஒவ்வொருவராக யோசிப்பது, எத்தனை உறவுக்காரர்கள்...? அப்புறம் பத்துப் பன்னிரண்டு ஸ்தான எண்களை மற்றொரு எண்ணால் பெருக்க வேண்டியது. அப்புறம் சின்ன வயசிலிருந்து சாப்பிட்ட ஓட்டல்கள், படித்த புத்தகங்கள்! சொன்ன பொய்கள்..."

"சுஷ்மாவின் கடிதங்கள்?"

"அவைகளை நான் பலமுறை படித்தாகி விட்டது. சுஷ்மாவை நான் இதுவரை சந்தித்ததில்லை. அது ஒரு எதிர்பார்ப்பு. உடல் சம்பந்தமான அசிங்கங்கள் எல்லாம் விலகிய அறிவுபூர்வமான நேர்த்தியான நேரத்தில்தான் அவளைச் சந்திக்க விரும்பினேன்.

"ஸ்ரீனிவாசமூர்த்தி சாகாதே, சாகாதே. எத்தனை பாக்கியிருக்கிறது? தலைவாரிக் கொண்டு அவசரமாகப் பள்ளிக்குச் செல்லும் எத்தனை சிறுமிகளின் களங்கமற்ற சிரிப்புக்கள் பாக்கியிருக்கின்றன. அவர்கள் தத்தம் பெற்றோரைப் போல் கைகால் ஆட்டி, உதட்டைப் பிதுக்கிக் கொண்டு பேசுவதை ரசிக்க வேண்டாமா?" ஸ்ரீனிவாசமூர்த்தியின் படிமங்கள் கவிதாவதாரம் பெற்றன. "எத்தனை பார்க்க வேண்டியது பாக்கியிருக்கிறது?

"முதல் மழையின் மண்வாசனை!

"இன்லண்டு லெட்டரில் இரண்டு கவிதைகள்!

"ஞாயிற்றுக்கிழமை ஒரு மணி நேரத் தூக்கம்!

"கம்பனின் கன்னட மொழிபெயர்ப்பு!

"சௌரஸ்யா, எல். ஷங்கர்.

"செக்ஸ் விலகிப் போன தனிப்பட்ட இளமையின் பிரகாசம்... கடற்கரையில் விடு வித்த குதிரைகள்... நடுக்காட்டில் பருவ மழை...

''சேதனம் என்பது பிரும்மத்தின் சக்தி; எல்லாவற்றையும் பார்க்கும், எதாலும் தொட முடியாத இந்தச் சேதனப் பொருள் நம் உட லெங்கும் பரவியிருக்கிறது என்பார்கள். அந்த ராத்திரிகளில் என் ஆத்மாவுடன், என் மனசுடன், என் புத்தியுடன், என் சேதனத் துடன் என்னால் தொட்டுப் பேச முடிந்தது...''

''எதிர்பார்ப்புக்கள்!''

''உங்கள் மனைவி எழுதிய கடிதம் ஒன்று சொன்னீர்கள்.''

ஸ்ரீனிவாசமூர்த்தி என் கேள்விகளால் பாதிக்கப்பட்டாரா, தெரியவில்லை!

''அவள் என்னை இருபது வயசில் கைப் பிடித்தாள். அம்பது வருஷங்கள் என்னுடன் வாழ்ந்து முடிவதற்குப் பதினைந்து தினங்கள் இருக்கும் போது செத்துப் போனாள். ராத்திரி யெல்லாம் அவள் உடலைத் தொட்டுக் கொண்டே இருந்தேன். அவளை நடத்திய தைப் பற்றி, அவளை அடித்ததைப் பற்றி... யோசித்தேன். பிணம் தூக்குவதற்குமுன் அவள் நகைகளைக் கழற்ற வேண்டியிருந்தது. தாலிக் கயிற்றில் ஊக்குப் போட்டு ஒரு சாவி இருந்தது. அவளுடைய அலமாரியை யாரும் திறந்ததில்லை. அந்தச் சாவி திறந்தது. அதில் தான் அவள் எனக்கு எழுதிய ஒரே கடிதம் இருந்தது. அதை நான் இன்னும் பிரித்துப் படிக்கவில்லை. அதில் என்ன எழுதியிருக்கும் என்று எனக்குத் தெரியும். அல்லது தெரி யாது. அவளுக்கு என் பாவத்தைப் பற்றித் தெரியும் என்றுதான் தோன்றியது.''

''என்ன பாவம்?''

''சொல்லப் போகிறேன்! சுஷ்மாவைச் சந்திப்பதைப் போல. அதையும் ஒரு எதிர் பார்ப்பாக வைத்திருக்கிறேன். என் மனைவி யின் கடிதத்தைப் படிக்க வேண்டிய வேளை அல்லது மனப்பக்குவம் இன்னும் வரவில்லை.

"எத்தனையோ எழுதிவிட்டேன். இருந்தா லும் ஹெமிங்வேயின் 'கிலிமஞ்சாரோ'வில் போல 'இதை எழுதியிருக்கலாமே? அதை எழுதவேண்டுமே? இதைஇன்னும்சிறப்பாக, மழுப்பாமல் எழுதியிருக்கலாமே' என்ற எதிர்பார்ப்புகள் இருந்தன. நான் போன பின் நான் எழுதப் போவதையெல்லாம் வேறு யாராலும் எழுத முடியாதே! வம்சம்



அப்படியே நின்று போய் விடுமே, என்று ஆவேசம் வேறு.

"உயிர் ஆசை! எத்தனை தீவிரமானது! அது தான் என்னைச் சமாளிக்க வைத்தது. மண்டையும் காகிதத்தையும், பூச்சியையும் சாப்பிட வைத்துப் பைத்தியம் பிடிக்காமல் எண்ணங்களைக் கட்டுப்படுத்தி வலியை மறக்க வைத்து, பதினைந்து நாட்கள் அப்படியே தேரை போலக் கிடந்தேன். அவர்கள் வெல்டிங் செட்டுகளும், கம் பூட்ஸுகளும், பிக் ஆக்ஸ்களுமாக வந்து என்னைக் கடைசியில் புரட்டி... கண்டுபிடித்தபோது, எனக்கு என்னவோ வேற்று உலகம் போல, சந்திர மண்டலம் போல இருந்தது.''

''தாத்தா! ஜலம்!''

"எனக்கு இருந்த மரண பயத்தில் பேசாமல் தூங்கிப் போயிருந்தால் செத்துப் போயிருப்பேன். நான் இருப்பதில் யாருக்கும் அதிக பிரயோஜனமில்லை. என் மகன் தோற்றம், நடை எல்லாம் அவன் அம்மாவேதான். கொஞ்சம் கூட இலக்கிய உணர்ச்சி கிடையாது. மகன் காத்திருக்கிறான். மண்டியா வீட்டை நான் செத்துப் போன பத்தாவது நிமிஷம் விற்றுவிடுவான். விற்றுவிட்டு ராஜாஜி நகரில் ஓர் எலிவளை வாங்கப் போகிறார்கள். சுஷ்மா சொல்லிவிட்டது. 'நான் உயிருடன் இருக்கும் வரை சம்மதிக்க மாட்டேன்.' நான் போனதும் ராயல்ட்டி தொகைகளையும் ஹெக்டே மகானுபாவன் கொஞ்சம் பென்ஷன் தருகிறான். அதைச் சேர்த்து வைத்ததையும் இன்ஷியூரன்ஸ் சமாசாரங்கள் எல்லாம் சேர்த்து அவனுக்குத்தான் வரப் போகிறது. இனிமேல் கிழம் புத்தகம் எழுதிச் சம்பாதிக்கப் போவதில்லை. விபத்தில் சாகாமல் திரும்பி வந்தது அவனுக்கு ஏமாற்றமாக இருந்தது. என் சக சாகித்தியகர்த்தாக்களுக்கும், பத்திரிகைக்காரர்களுக்கும் கூட ஏமாற்றம். மூன்றாவது நாளே நாலும் 'மிஸ்ஸிங்' என்று தெரிந்து போய், 'ஆபிச்சுவரி' தயாராகக் க ட்டம் அமைத்துக் காத்திருந்தார்கள். எல்லோரையும் ஏமாற்றிய என் உயிராசை பதினைந்து நாட்களைக் கடக்க வைத்து விட்டது. எப்படித் தப்பித்தேன்! எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. எனக்கு ஏதோ ஒன்று செய்ய வேண்டியது பாக்கி இருக்கிறது! அதனால்தான் உயிர் பிழைத்திருக்கிறேன். ஒரு முக்கியமான பாவச் செயல் என் வாழ்க்கையில் நிகழ்ந்தது. அதை ஏதாவது ஒரு வடிவத்தில் கவிதை, கதை, அல்லது சித்திர வடிவத்திலாவது சொல்ல வேண்டும். சொல்லியே ஆக வேண்டும். அதை வெளி உலகத்திற்குச் சொல்லி விட்டுத் தான் சாவேன்!''

''என்னிடம் சொல்லிப் பார்க்கவிருப்பமா உங்களுக்கு?''

கிழவர் மெல்லப் புன்னகை புரிந்தார்: ''யூ ஆர் கிளெவர்.''

''நான் உங்கள் விருப்பமில்லாமல் யாருக்கும் வெளியிட மாட்டேன்!''

ஸ்ரீனிவாசமூர்த்தி மடியிலிருந்த மப்ளரை முண்டாசாகக் கட்டிக் கொண்டு பெஞ்சில் உட்கார்ந்தார். என்னையே சற்று நேரம் பார்த்தார். ''உன்னிடம் சொன்னால் என்ன போச்சு! நீ அதை எழுதினாலும் என்ன... என் வாழ்வின் சாயங்காலம் இது. அஸ்தமன வேளை. என்னைப் பற்றி எந்த '......' மகன் எப்படி நினைத்தால் என்ன? அதெல்லாம் முக்கியமா என்ன...? சொல்கிறேன்'' என்றார்.

அப்போது சுஷ்மா எங்களைத் தேடிக் கொண்டு வந்தாள். ''தாத்தா அண்ணா கூப்பிடுகிறார்! சீதாராம் அங்கிள் வந்திருக்கிறார்! வரச் சொல்லியிருந்தீர்களாமே!''

''ஓ, மறந்து போய்விட்டேன். சீதாராம் என் பப்ளிஷர்! பணம் கொண்டு வந்திருப்பான். சுஷ்மா! நீ போ! நான் இந்த மாமாவுடன் வருகிறேன்.''

சுஷ்மா என்னைப் பார்த்த போது அந்தக் கண்களில் உள்ள ஒரு மாதிரியான கிறக்கத்தை எங்கேயோ சமீபத்தில் பார்த்த மாதிரி இருந்தது. ஸ்ரீனிவாசமூர்த்தி சகல சௌகரியங்களும் பண்ணிக் கொண்டு உடம்பைப் பத்திரப்படுத்திக் கொண்டு, ''வா, நடந்து கொண்டே பேசலாம்'' என்றார்.

இரண்டு பேரும் மெல்ல நடந்து பால் டிப்போ வரை வந்தோம்.

''நான் உயிர் வாழக் காரணமான அந்தப் பாவம் என் 46 வது வயதில் நிகழ்ந்தது. எங்கள் குடும்பத்தில் எல்லோருக்குமே ஒரு கிரீக் டிராஜடி போல் திரும்பத் திரும்ப...

அவர் கையைப் பிடித்துச் சாலையைக் கடக்க முற்பட்டேன். 'எனக்கு உதவி தேவையில்லை' என்பதுபோல் கையை விலக்கினார். எனக்கு முன்னேயே கடந்தார். அப்போது மூலை திரும்பிய பி. டி. எஸ். பஸ் ஒன்று உற்சாகமாக ஹாரன் அடித்துக் கொண்டு, ஸ்ரீனிவாசமூர்த்தி சற்றுத் தடுமாறி ஓட முயற்சி செய்வதற்குள் அவர்மேல் முழுசாக மோதிவிட்டது!

'பொட்'டென்று பாட்டில் உடைவது போல விழுந்துவிட்டார். பஸ் அவர் மேல் மோதியதைக் கவனிக்காமல் 'பப்பாய்' 'பப்பாய்' என்று ஹாரன் அடித்துக் கொண்டே சென்றுவிட, நான் பிரமித்த நிலையில் அவரருகே செல்ல மற்றவர்கள் ஓடிவர, ஸ்ரீனிவாசமூர்த்தி சுலபமாகச் செத்திருந்தார். சாலையில் குப்புறக் கிடந்த நிலையில் ஆழமாகத் தூங்குபவர் போலத்தான் தோன்றியது. காதருகே மெல்லச் சிறிய குளமாகிக் குழும்பிக் கொண்டிருந்த ரத்தம்தான் விபரீதத்தை அறிவித்தது.

''கடவுளே! இது அபத்தம், அபத்தம்!''

(முற்றும்)

பின் குறிப்பு:

தற்போது ஸ்ரீனிவாசமூர்த்தியின் வாழ்க்கைச் சம்பவங்களை, ஒரு ஃபெலோஷிப் எடுத்து தார்வாட பல்கலைக்கழகத்தின் சார்பில் தீவிரமாக ஆராய்ந்து கொண்டிருக்கிறேன். அவர் செய்த அந்தப் பாவம் என்ன? கண்டுபிடித்தே ஆக வேண்டும்! அதற்காகத்தான் உயிர் வாழ்கிறேன்!

அண்ணா மாவட்டம் முன்னேற:

# "மத்திய அரசின் மெத்தனப் போக்கு மாற வேண்டும்!"

## — துணை சபாநாயகர் கூறுகிறார்

அண்ணா மாவட்டத்தில் தொழில் வளர்ச்சி என்று எடுத்துக் கொண்டால் கடந்த 80 — க்கு முன்பெல்லாம் ஒரு கொல்லன் பட்டறைகூட இல்லை என்கிற நிலைதான். இதைக் கருத்தில் கொண்டுதான், பாளையம் பகுதிகளில் கிடைக்கும் தரமான சுண்ணாம்புக் கற்களைக் கொண்டு அண்ணா மாவட்டத்திலேயே ஒரு சிமெண்ட் தொழிற்சாலை நிறுவினால் சுமார் நான்காயிரம் பேர்களுக்காவது வேலை கிடைக்குமே என்று திட்டமிட்டோம். எங்களின் இந்தத் திட்டத்தை மறைந்தபிரதமர்திருமதி இந்திராகாந்தியிடம், தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களே இரண்டு முறை எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

முதல்முறைசொன்னபோது, 'அகலரயில் பாதை வரட்டும்! பிறகு பார்க்கலாம்!' என்று சொன்னார்கள். கரூர் — திண்டுக்கல் அகல ரயில் பாதை வேலை ஆரம்பிக்கப்பட்டதும் மறுமுறை சொன்னோம். அப்போது 'நிலக்கரி பற்றாக்குறையாக இருக்கிறது' என்று சொல்லி விட்டார்கள். இதற்கெல்லாம் என்ன காரணமோ தெரியவில்லை. இவ்விஷயத்தில் மெத்தனம் காட்டும் மத்திய அரசு தான் மனம் வைக்க வேண்டும்.

அடுத்து, எங்கள் அண்ணா மாவட்டத்தில் உள்ள வெள்ளம்பட்டி அருகில் சில விவசாயிகள் கிணறு தோண்டிய போது, இரும்பு கிடைத்திருக்கிறது. அதைக் கிண்டி ஆய்வு மையத்தில் ஆராய்ந்து பார்த்த போது, அறுபத்தேழு சதவிகிதம் தரமான இரும்பு கலந்திருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. எனவே மேலும் ஆய்வு செய்து எங்கள் அண்ணா மாவட்டத்தில் ஓர் இரும்புத் தொழிற்சாலையும் நிறுவலாம்.

"மதுரையிலிருந்து அண்ணா மாவட்டம் பிரிந்தபோது, பாண்டிய ராஜபுரத்திலுள்ள சர்க்கரை ஆலை மதுரை மாவட்டத்தோடு சேர்ந்து விட்டது. அந்தச் சர்க்கரை ஆலைக்குச் செல்லும் கரும்பு அத்தனையும் எங்கள் மாவட்டத்திலிருந்துதான் செல்கின்றன. அதனால் எங்கள் மாவட்டத்திலும் ஒரு சர்க்கரை ஆலை அமைக்கலாம். வறட்சியால் பாதிக்கப்பட்டுக் கொண்டிருக்கும் விவசாயிகளை விசைத்தறிகள் நிறுவும்படி ஊக்குவிக்கலாம்.

"மேலும், அடிக்கடி வரும் வறட்சியால் விவசாயம் பாதிக்கப்பட்டுக் கொண்டிருப்பதுபற்றிச்சொல்லவேதேவையில்லை.மழைக் காலத்தில் கிடைக்கும் மழைத் தண்ணீரில் எழுபத்தைந்து சதவிகிதம் வீணாகி விடுகிறது. அதாவது காட்டு ஓடைகளில்பெருக்கெடுத்து ஓடும் வெள்ளம் யாருக்கும் பயன்படாமல் கடைசியில் கடலில் சென்று கலந்து விடுகிறது. இதுகட்டாயம்தடுக்கப்பட்டாகவேண்டும். அதற்குக் காட்டோடைகள் அத்தனையையும் ஒன்றாக இணைத்து ஆங்காங்கே இருக்கும் ஏரிகள், குளங்கள், கண்மாய்கள் ஆகியவற்றில் மழைத் தண்ணீரைச் சேமித்து வைக்கலாம். அப்படிச் செய்தால் கிடைக்கும் மழைநீர் அனைவருக்கும் பயன்படும்படி செய்யலாம். இதை அண்ணா மாவட்டத்தில் மட்டும் தான் செய்ய வேண்டும் என்பதில்லை. எல்லா மாவட்டங்களிலும் செய்யலாம்.

"கடைசியாக ஒன்று; நமது பத்திரிகைகள், தவறுசெய்யும்எம்.எல்.ஏக்களையும்அரசியல்வாதிகளையும், அதிகாரிகளையும் பற்றியே எழுதிக் கொண்டிருக்காமல், ஒழுங்காகத் தொகுதிப் பணிகளைக் கவனிக்கும் எம். எல். ஏக்கள், அதிகாரிகள், அமைச்சர்கள் ஆகியோரைப் பற்றியும் எழுதினால், அவர்கள் இன்னமும் உற்சாகமாகப் பணியாற்றுவார்கள். மற்றவர்களுக்கும் வழிகாட்டியாக இருக்கும்!" என்கிறார் துணை சபாநாயகரும் அண்ணா மாவட்டம் வேடசந்தூர் தொகுதி எம். எல். ஏ. (அ. இ. அ. தி. மு. க.) வுமான வி. பி. பாலசுப்பிரமணியம்.

— நமது நிருபர்

வேடம் — எது பொருந்தும்?

! இயல்பாகவே லட்சணமான அவருக்கு, எல்லா வேடங்களுமே பொருந்தும். ஆனால் நடிக்க வேண்டாமா? டைரக்டரின் திறமையால் மட்டுமே நடிப்பு மிளிரும் ரகத்தைச் சேர்ந்தவர் ராதா.

நீங்கள் கேட்டவை
— தராசு

* பா. எழிலோவியன், பழனி.

? கண்ணனின் கரங்களில்
லஞ்சப் பணம்! ஐயகோ!
பாண்டவர் தோற்றனர்.
— இந்தக் கவிதை எப்படி?

! ஐயகோ! இன்றைய கண்ணன்களும் இராமர்களும் அப்படித்தான் ஆகிவிட்டனர்! கவிதை அருமை!

* க. இளங்கோ, நந்தியநல்லூர்.

? இலவசப் பாடப் புத்தகங்களை எப்போது வழங்குவார்கள்?

! ஏழைப் பெற்றோர்கள் எப்படியெப்படியெல்லாமோ கஷ்டப்பட்டுத் தங்கள் குழந்தைகளுக்குப் புத்தகங்கள் வாங்கித் தந்த பிறகு.

* கே. ஆர். கமலஹாசப்ரியன், காரிமங்கலம்

? தலையாட்டிப் பொம்மைகள் எந்தக் கட்சியில் அதிகம்?

! சில தலைவர்களே தலையாட்டிப் பொம்மைகளாகத்தான் இருக்கிறார்கள் ஸ்வாமி!

* அருண், ஈரோடு—3.

? சிறந்த அன்பளிப்பு எது?

! அன்பு

* பி.டி. சண்முகராஜ், பல்லாவரம்.

? எம்.ஜி. ஆரின் தவறுகளைத் தமிழகம் என்றுதான் உணரும்?

! அறிவு, சுடர் விட்டுப் பிரகாசிக்கும் போது.

* எம்.டி. தாழை பிரபு, குடியாத்தம்.

? ராதாவுக்குக் கிராம வேடம், நாகரிக

* எஸ். ராம்கோபால், சென்னை—33.

? தங்களைத் திடுக்குறச் செய்த சமீபத்திய சம்பவம் ஏதாவது?

! ஓய்வு பெற்ற இராணுவ தளபதி வைத்யாவின் படுகொலை. பயங்கரவாதம் என்பது எவ்வளவு கோழைத்தனமானது! சீச்சீ! மோட்டார் சைக்கிளில் வந்து காரிலும் பஸ்ஸிலும் செல்வோரைப் படுகொலை செய்துவிட்டுத் தப்பி ஓடுவதைப் போய் வீரமென்று எண்ணி, அத்தகையோருக்கு பாதலும் டோராவும் பரிந்து கொள்வது எவ்வளவு அற்பத்தனமானது! சேச்சே! இத்தகைய பயங்கரவாதிகளுக்குப் புகலிடம் மட்டுமின்றிப் பயிற்சியும் அளித்து இந்தியாவுக்குள் ஊடுருவச் செய்கிற பாகிஸ்தானின் நடத்தை எவ்வளவு அருவருப்பானது!

# சந்தியா கால வேளைகளை ரசிப்பதுண்டா?

தூத்தூ! பயங்கரவாதிகளை எதிர்த்துப் போராடவும் வளைத்துப் பிடிக்கவும் மாவீரர்கள் பலர் நமது பல ரகப் போலீஸ் படைகளில் இருந்தாலும் பயங்கரவாதிகளின் நடமாட்டங்களைச் சரியாக உணர முடியாமல் நமது துப்பறியும் பிரிவு படுதோல்வி அடைந்திருப்பது மானக்கேடு! ஷேம்! ஷேம்!

* கே.எம். ஜான் முஹமது, இளையான்குடி *

? சீக்கியர்களைப் பாதுகாக்கத் தவறிவிட்டார் என்று பஞ்சாப் முதலமைச்சர் பர்னாலா மீது சீக்கிய மாணவர்கள் குற்றம் சாட்டி இருப்பது பற்றி...?

! அபத்தம். உண்மையில் பஞ்சாபிலுள்ள ஹிந்துக்களைப் பாதுகாக்க முடியாமல்தான் பர்னாலா தவிக்கிறார். இந்துக்கள் பலர் அகதிகளாகப் பஞ்சாபிலிருந்து வெளியேறுகின்றனர். அல்லது படுகொலை செய்யப்படுகின்றனர். பயங்கரவாதிகளுக்குப் பயிற்சி அளித்து இந்தியாவுக்குள் அனுப்புவது பாகிஸ்தான்தான் என்பது உலகறியத் தெரிந்த பிறகு எல்லைப்புறத்தில் ஊடுருவலைத் தடுத்துவிட ராணுவத்தை நிறுத்தித்தான் ஆக வேண்டும். இதற்கு ராஜீவ் எடுக்கும் முயற்சிக்கு மாநிலங்களின் உரிமையில் குறுக்கிடுவதாகக் கூறி பர்னாலா எதிர்ப்புத் தெரிவிப்பது மடமை. தன்னாலும் முடியாது, மத்திய அரசு செய்தாலும் விடமாட்டேன் என்ற போக்கு ஜியாவுக்கே சாதகமாக இருக்கும் என்று எச்சரித்து பர்னாலா மீது குற்றம் சாட்டுகிறேன்!

* எஸ். ஏ. காஜா மொய்தீன்,
முக்கண்ணுமலைப்பட்டி.

? மனு தாக்கல் செய்த பின்பு, வாபஸ் வாங்குவது ஏன்?

! 'சில்லறை'யை எதிர்பார்த்துச் சில சுயேச்சைகள் மனு தாக்கல் செய்வார்கள். கிடைத்ததும் வாபஸ் பெறுவார்கள். சில சமயங்களில், பெரிய கட்சிகளேகூட எதிர்க்கட்சியினருக்குக் கிடைக்கும் வாக்குகளைச் சிதறச் செய்வதற்காகக் கூடுதலான வேட்பாளர்களை நிறுத்துகிற 'மதுராந்தக' வேலைகளைச் செய்வதுண்டு! வெற்றி வாய்ப்புள்ள ஒருவருக்கு உதவி செய்யும் வகையில் சில கட்சிகள் விட்டுக் கொடுத்து வாபஸ் வாங்குவதும் உண்டு. மேலும், வேட்பு மனுக்களைப் பரிசீலிக்கும் அதிகாரிகள், விதிகளின்படி இல்லாத வேட்பு மனுக்களை நிராகரித்து விடுவார்கள் என்பதால், அப்படி நிராகரிக்கப்படும்போது, தங்கள் கட்சி போட்டியிட முடியாமல் போய்விடுமே என்ற ஜாக்கிரதை உணர்வில், மாற்று வேட்பாளராக (டம்மி) ஒருவரை நிறுத்தி, முக்கியமானவரின் மனு ஏற்கப்பட்டதும் மாற்று வேட்பாளரின் மனுவை வாபஸ் பெறுவதும் நடைமுறைதான்.

* ஆர். மைதீன் பாட்சா, வல்லம்.

? ராஜீவ் காந்திக்கு வசதியாக, இரண்டு நாட்கள் கழித்துத்தான் பாபுஜி மரணம் அறிவிக்கப்பட்டதென்பது உண்மையா?

! மொரிஷியஸ் தீவுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த ராஜீவ் ஏர்போர்ட்டிலிருந்து அவசரமாக ஆஸ்பத்திரிக்குத் திரும்பி வந்து பாபுஜியைப் பார்த்தபோது, அகில இந்திய வானொலி கூட பாபுஜி இறந்துவிட்டார் என்று அறிவித்தது உண்மைதான். அதன் பிறகு வானொலியே தனது தவறுக்கு வருந்தியது. இந்தக் குளறுபடிகளால், நீங்கள் கேட்டதுபோல் சிலருக்குச் சந்தேகங்கள் தோன்றத்தான் செய்தது. ஆனால் அவையெல்லாம் நிஜமல்ல.

* ஆர். நிகிலா, புகளூர்.

? சந்தியா காலவேளைகளை ரசிப்பதுண்டா?

! உண்டு! உண்டு! ஆனால் கெட்டுப் போன காற்று மண்டலத்தைக் கொண்ட சென்னையிலிருக்கும்போது அல்ல. அமைதி தவழும் கிராமங்களுக்குச் செல்லும்போதெல்லாம் அந்த மாயாஜால வண்ணங்களைக் கண்டும் அந்தி சாயும் அந்த வேளைகளில், கூடு திரும்பும் பறவைகளின் கானங்களைக் கேட்டும் மனத்தைப் பறி கொடுத்து விடுவதுண்டு. சென்னைக்கு வந்தபிறகும், 'ஊர் வந்து சேர்ந்தேன்; ஆனால் உளம் வந்து சேரக் காணேனே' என்று பல நாட்களுக்கு ஏங்கித் தவிப்பதுமுண்டு!

* ரூ 10 பரிசு பெறுபவர்:
கே. எம். ஜான் முஹம்மது,
22A, ஹவுத் அம்பலம் தெரு,
இளையான்குடி (அஞ்சல்),
பசும்பொன் முத்துராமலிங்கம் மா.வ.

# ஒவ்வொரு நிமிஷத்திலும் லாபம் தேடு!




## வாழ்க்கை வாழ்வதற்கே!

**போ**ன வாரம் இல்லஸ்டிரேடட் வீக்லியின் நடுப் பக்கத்தில் ஒரு பெண்ணின் நிர்வாணப் படம் வெளி வந்திருக்கிறது. 'இப்படி பெண்ணினத்தை இழிவு படுத்துகிறீர்களே' என்று ஒரு நாடாளுமன்ற உறுப்பினர் பத்திரிகையைச் சபையில் விரித்துக் காட்ட, அந்தப் படத்தைப் பார்க்கப் பல உறுப்பினர்கள் அடித்து பிடித்துக் கொண்டு ஓடி வந்திருக்கிறார்கள். "உங்கள் நடத்தை என்னைத் தலைகுனியச் செய்கிறது" என்று வருந்தியிருக்கிறார் சபாநாயகர்.

பத்திரிகையின் விற்பனையை அதிகரிக்க ஒரே வழி செக்ஸும் சென்சேஷனும் தான் என்றாகி வருவது துர்பாக்கியம். மூன்று, நாலு வாரங்களுக்கு ஒருமுறை ஒரு நிர்வாணப் படத்தைப் போட்டுவிட்டு அதற்குக் கலை முத்திரை குத்தி விடுவார்கள். அல்லது ஓர் ஆபாச சினிமா ஸ்டில்லைப் போட்டுவிட்டு, "இந்த ஆபாசம் சினிமாவில் தேவைதானா?" என்று கேட்பார்கள். இவை மோசடிகளே. இவர்களுடைய உண்மை நோக்கம் விற்பனையை அதிகரித்துக் காட்டி விளம்பரதாரரைத் திருப்திப்படுத்துகிற சுயநலம்தான். நாடாளுமன்றத்துக்கு வீக்லி பத்திரிகையைக் கொண்டு வந்து விரித்துக் காட்டிய அங்கத்தினரும் ஒரு பரபரப்பை ஏற்படுத்தித் தம்பால் கவனத்தை ஈர்க்கிற ஒரு சுயநலநோக்கில்தான் செயல்பட்டிருக்கிறார். இல்லையெனில் அவர் பத்திரிகையைக் கொண்டு வராமலே அது பற்றிக் குறிப்பிட்டுப் பேசியிருக்கலாம் அல்லவா? தமிழகப் பத்திரிகைகள், மாதாந்திர நாவல்கள் முதலியவற்றிலும் இதுபோன்ற போலித்தனங்களுக்குக் குறைவில்லை. மருத்துவ ஆலோசனை, மனோதத்துவ ஆலோசனை என்றபெயர்களில் கூட இப்போது ஆபாசம் புஷ்பிக்கத் தொடங்கியிருக்கிறது.

அண்மையில் புத்தகங்கள் வெளியீட்டு விழா ஒன்றில் ஆபாசமாக எழுதுகிறார் என்பதற்காக ராஜேந்திர குமார் கண்டனத்துக்கு உள்ளானார். அதே மேடையில் அவருக்கு வக்காலத்து வாங்கிப் பேசிய அடியார், "ஆபாசம் என்று ராஜேந்திர குமாரின் எழுத்தை ஒதுக்குவீர்களானால் திருக்குறளின் மூன்றில் ஒரு பங்கை நீங்கள் ஒதுக்க நேரிடும்; கம்பனின் பல பாடல்களை நாம் இழக்க நேரிடும். காளிதாசனை மறக்க வேண்டியிருக்கும்" என்றெல்லாம் சொன்னார். மேல் நாடுகளிலும் எமிலி ஸோலா, டி. எச். லாரன்ஸ் போன்றோரது நாவல்களுக்குத் தடை விதிக்கப்பட்டுப் பின்னர் தடை நீக்கப்பட்டதுமுண்டு. ஆனால் இதனாலேயே ராஜேந்திர குமார் ஆபாசமாக எழுதும் உரிமை பெற்றுவிட்டார் என்று கூறுவதுதான் மோசடி. கம்பனைப் போல் ராஜேந்திர குமாரால் ஒரு காவியம் படைக்க முடியுமானால், காளிதாசனைப் போல ஒரே ஒரு கவிதை எழுதும் ஆற்றல் இவருக்கு இருக்குமானால், ஸோலாவைப் போல் ஒரு நாநாவை உருவாக்க இவரால் முடியுமானால், இவரும் செக்ஸ் வர்ணனைகளைப் புகுத்தி எழுதட்டுமே! "எது ஆபாசம் என்பது அவரவர் மனப் பக்குவத்தைப் பொருத்த விஷயம்" என்று சால்ஜாப்பு கூறுவது மற்றொரு ஏமாற்று வேலை. படிப்பவனுக்கு இலக்கியம் எது, ஆபாசம் எது என்று நன்றாகத் தெரியும். தெரிந்துதான் படிக்கிறார்கள். இது காரணமாகத்தான் இன்று மேல் நாட்டு நூல்கள் பலவற்றில் சராசரி இருபது பக்கத்துக்கு ஓர் ஆபாச வர்ணனையைத் திணிக்கிறார்கள்.

மறுபடி ராஜாஜியைத்தான் நினைவு கூர வேண்டியிருக்கிறது. பக்தி இலக்கியங்களையும் அறிவியல் நூல்களையும் மட்டுமின்றி நாவல்களையும் ஏராளமாக விரும்பிப் படித்த அவர் சொன்னார்: "எந்த ஒரு புத்தகத்தைப் படிக்கும்போதும் உன் வாழ்க்கையின் திரும்பப் பெற முடியாத பல மணி நேரங்களை அதற்கு நீ கொடுத்து விடுகிறாய். அதற்குப் பதில் நீ அதனிடமிருந்து என்ன பயன் பெற்றாய் என்று பார்க்க வேண்டும். அது உன்னை இப்போதுள்ளதை விடவும் அறிவாளியாக, வீரமுள்ளவனாக, நற்குணங்கள் மிக்கவனாக வளர்த்திருக்கிறதா? அத்தகைய நூல்களே உனக்கு லாபகரமானவை. மற்றவை உன்னை ஏமாற்றி உனக்குப் பேரிழப்பையே ஏற்படுத்துகின்றன." ராஜாஜி நூல்களைப் பற்றிச் சொன்னது பத்திரிகை, சினிமா, டீ.வி. நிகழ்ச்சிகள் ஆகியவற்றுக்கும் பொருந்தும்.

வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிஷமும் நமக்கு லாபகரமாக அமையட்டும்.

— ஜீவன்

Printed by V. Muraii and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani.
Editor: K. Rajendran



கள்ளி பொறுக்கும் கன்னி,
சிரித்து மகிழ்வதென்ன?

சென்றால் சென்னை இன்றே
செழிக்கும் வாழ்க்கை என்றே

மச்சான் சொன்ன வார்த்தை
மனத்தில் நிலைத்ததாலோ?

•

வாய்ப்பு அங்கு உண்டு;
வாழ்த்தும் மனமும் உண்டு;

அதிகம் உழைக்க வேணும்,
அதிர்ஷ்டம் நிறைய வேணும்.

•

எங்கு வசித்தால் என்ன?
என்றும் நசியா உண்மை:

சோறு போடும் உழைப்பு;
சோம்பல் சிதைக்கும் வாழ்வு.

தத்துவம் புரிந்தால் பெண்ணே,
நித்தியம் பெருகும் வளமே!

வண்ணப்படம்: திலீப் பானர்ஜி

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# ஸர்ஃப் வாங்குவது மேலும் புத்திசாலித்தனம்

''தெரிஞ்சே சொல்றேன்; ஸர்ஃப் வாங்கறதைப் போல புத்தியுள்ள காரியம் எதுவுமே இல்லே. பவர் பேக்டு தயாரிப்பு ஆச்சே. அபார சக்தி— கொடுத்த பணத்துக்கு அமோகமாப் பலன்.''

**அமோகமாப் பலனு? ஸர்ஃப் விலைதான் அதிகமாச்சே, லலிதாம்மா?**

''அண்ணாச்சி, எத்தனே விதமா லாபம் தருது, உங்க கண்ணுல படலியா? ஸர்ஃப் ஒண்ணுதானே எதையும் வெள்ளைவெளேர்னு வெளுக்குது. அதனால, பார்வைக்கு எப்பவுமே புதுக்கருக்குதான். எந்த நாளுமே பண மிச்சம். கணக்குப் பாருங்க— அமோகமாப் பலன்னு இதானே?''

**சரி, அப்படி என்னதான் இருக்கு ஸர்ஃப்லே?**

''நிறையவே இருக்கு. அளவுக்கு அளவு 1 கிலோ சாதா பவுடருக்கு ஈடு ஒரு ½ கிலோ ஸர்ஃப். அதாவது 1 கிலோ சாதாப் பவுடர் எவ்வளவு துணிகளை வெளுக்குமோ, அதையே பாதி அளவு ஸர்ஃப் வெளுத்திடும். பார்த்துக்குங்களேன், ஸர்ஃப் நமக்கு அதிக லாபம்தானே?''



| | |
|---|---|
| 1 கிலோ சாதா பவுடர் | ½ கிலோ ஸர்ஃப் |

**அப்ப ஸர்ஃப் ஒரு வகையில ஈடு செய்துடுது?**

''ஏன், பல வகையில லாபம் நமக்கு. மலிவுச் சரக்கு வாங்கறதுக்கும் மதிப்புள்ள பண்டம் வாங்கற துக்கும் வித்தியாசம் உண்டே. அதனாலதான் சொல்றேன் ஸர்ஃப் வாங்கறதுதான் மேலும் புத்திசாலித்தனம்.''




LINTAS SU 351 2416

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு